# சிவாஜி

ஞாயிறு வெளியீடு

SHIVAJI
TAMIL WEEKLY
28th year
of Publication
25—11—1962

அரசியல், தொழில் வள, சமுதாய நல, கலை, இலக்கிய வார இதழ் ◆ ஆசிரியர்: திருலோகசீதாராம்

# ஏகாதிபத்தியம் என்ற பல்லவி

## கோரப்பல் காட்டும் சீனா கொள்கை பற்றிப் பேசுகிறது

ஏகாதிபத்தியம், நாடு பிடிக்கும் வெறி, போன்ற வார்த்தைகள் சீனாவுக்கு மிகவும் பிரியமானவை. காரணகாரியமின்றி அவைகளை எந்தச் சமயத்திலும் உபயோகப்படுத்த அவர்கள் தவறுவதில்லை. இது அவர்களுடைய பூர்வீகப் பழக்கம்.

சீனா சொல்வதைச் சரி என்று ஒப்புக்கொள்ளாதவர்கள் எல்லாம் அவர்களுடைய கண்ணுக்கு ஏகாதிபத்தியவாதிகள் தான். சொற்களின் பொருள்களை அடிக்கடி மாற்றிக்கொண்டே வந்து அதன் பொருளையும் முக்கியத்துவத்தையும் மாற்றிவிடப் பார்க்கிறார்கள். சொற்களெல்லாம் கொள்கை விளக்கும் சாதனங்களே. அவரவர்களுடைய சௌகரியங்களுக்கேற்றபடி அவைகளை மாற்றுவது நியாயமல்ல.

சீனர்கள் தங்கள் சுய உருவத்தை கண்ணாடியில் பார்த்தால் கூட அவர்களுக்குப் பிடிக்காது. இந்தியாவின் ஹிமாலய எல்லைப்பகுதியில் இன்று நடப்பதைப் பற்றி சீனர்கள் சொல்வதை உலகம் நம்ப மறுக்கிறது.

சமாதானத்தீர்வு ஏற்பட வேண்டுமென்று மனப்பூர்வமாக விரும்புபவர்கள்கூட சீனாவை ஆக்கிரமிப்பாளர் என்றே கூறுகின்றனர். ஆனால் இந்தச் சண்டை உலக அமைதியைச் சீர்குலைத்துவிடக்கூடாது என்று அஞ்சுகிறார்கள். இந்தச் சண்டை அமைதியாக முடிந்துவிடவேண்டுமென்று அவர்களைப் போல பிற நாட்டினரும் கருதவில்லை என்பது பொருளல்ல. ஆனால் அவர்களுக்குச் சீனர்களின் நயவஞ்சகம் பழக்கமான அம்சமே. சமீபத்தில் பல நாடுகள் ஆக்கிரமிக்கப்பட்டதுபோல இந்தியாவும் இப்போது ஆக்கிரமிப்புக்கு உள்ளாகியிருக்கிறது என்று அவர்கள் கருதுகிறார்கள்.

இதைப்பற்றி பிரிட்டிஷ் பிரதமர் திட்ட வட்டமாக விளக்கியுள்ளார். அமெரிக்க அதிபர் கென்னடியும் அவ்வாறு விளக்கியிருக்கிறார்.

ஜனநாயக உலகத்தைச் சேர்ந்த பிறநாடுகளும் அவ்வாறே தீர்ப்பளித்திருக்கின்றன. உண்மை நிலையின் அடிப்படையில் சமாதானத்தை ஏற்படுத்த அதிபர் நாசர் முயன்றார். அது பலனளிக்காமல் போயிற்று. ஆனால் கெய்ரோ பத்திரிகைகள் சீன ஆக்கிரமிப்பை கண்டிப்பதில் பின் தங்கவில்லை.

ஆனால் வெகு தூரத்திலிருந்து வருகிற இந்தக் கருத்துக்கள் சீனாவின் செவிகளில் நுழையாது. அண்டை நாட்டினரான மலேயா பிரதம மந்திரி துங்கு அப்துல் ரஹ்மானும் சீனாவை வன்மையாகக் கண்டித்திருக்கிறார். சீனர்களின் அனுபவம் அவருக்கு நிறைய உண்டு. முஷ்டியை மடக்கிக் கொண்டிருக்கும் சீனர்களை நமது வாசலில் வைத்திருப்பது மிகவும் ஆபத்தானதாகும்.

சீனர்களின் நோக்கம் சாதாரணமானதல்ல. இன்னும் பயங்கரமானதாகும். அது நமது பிரதம மந்திரி சொன்னதுபோல ராணுவ பலத்தைக்கொண்டு பிற நாடுகளைப் பிடிக்கும் வெறியாகும். நயவஞ்சகமும், ஏமாற்று வித்தையுமே அதன் ஆயுதங்கள்.

சீனா இன்று அதன் உண்மையான உருவத்தில் நிற்கிறது. பன்னெடுங்காலமாகவே சீனர்கள் சர்வாதிகார ஆசை கொண்டவர்கள் தான். அது சென்ற சில காலமாக வெளியில் தோன்றுவதற்குக் காரணம் உள்நாட்டு நிலைமையே தவிர வேறல்ல. சீனாவில் குழப்பமிருந்தாலும் சரி அல்லது அமைதி நிலவினாலும் சரி அதன் ஆட்சியாளர்கள் பிற நாட்டைப் பிடித்து தங்கள் அதிகாரத்தை விரிவாக்குவதிலேயே கண்ணுங் கருத்துமாக இருந்து வந்திருக்கின்றனர்.

சீனாவின் இந்த தேசீய பலஹீனத்தைப் பற்றி சீன வரலாற்று ஆசிரியர்களே வருத்தப்பட்டிருக்கின்றனர். கி. மு. மூன்றாவது நூற்றாண்டில் தென்கிழக்கு ஆசியாவையே அடக்கி ஆளும் ஆசை சீனர்களுக்கு இருந்ததாக அவர்கள் கூறியிருக்கின்றனர். சீனர்களின் வரலாறு நாடு பிடிக்கும் ஆசை நிறைந்தது.

மாசேதுங்கின் விடுதலைப் படைகளையும் - தங்கள் ஆக்கிரமிப்புப் படைக்கு அவர்கள் தரும் பெயர் - இந்தத் தொற்று நோய் பீடித்துவிட்டது. அவர்கள் மீண்டும் கோதாவில் இறங்கிவிட்டார்கள். தத்துவ ரீதியான கோஷங்களைக் கொண்டு இனிமேல் அவர்களுடைய ஆக்கிரமிப்பு எண்ணத்தை மறைக்க முடியாது.

★

## பஞ்ச சீலப் பசப்பலுக் குள்ளே பதுங்கிப் பாயும் சுயநலப் புலிகள்

இந்தியாவில் வட பகுதியில் மூர்க்கத்தனமாக ஆக்கிரமித்திருக்கிற சீனா, சமாதான சுகவாழ்வின் புனிதமான ஐந்து அம்சங்களை இன்னும் வாய்கூசாமல் சொல்லி வருகிறது.

'பீக்கிங் மக்கள் தினசரி' என்னும் பத்திரிகையிலிருந்து 'ரேடியோ பீகிங்' அக்டோபர் 29-ந் தேதியன்று பின் வரும் சில வாக்கியங்கள் ஒலி பரப்பியது. "சர்வாதிகாரத்தையும், காலனி ஆட்சி முறையையும் எதிர்த்துப் பல நாடுகள் நடத்தி வந்த போராட்டத்துக்குச் சீனா எப்போதும் தீவிர ஆதரவு அளித்து வந்திருக்கிறது. ஆகவே சீனாவுக்கும் இந்த நாடுகளுக்குமிடையே சமாதான சுகவாழ்வின் பஞ்ச சீலத்தின் அடிப்படையில் நட்புறவையும் ஒத்துழைப்பையும் ஏற்படுத்துவது அசாத்திய மட்டுமல்ல, அவசியமுமாகும்."

மேலே கூறப்பட்டுள்ள வாக்கியங்களில் ஆட்டுக்குட்டியின் மீது ஓநாய் காட்டும் அனுதாபம் தொனிக்கிறதல்லவா? ஒன்றும் தெரியாதவர்கள் போல நடித்துக் கொண்டே வலை வைக்கப் பார்க்கிறார்கள். பிற நாடுகளின் தேசீய உணர்ச்சியில் சீனா காட்டும் பரிவே தனிதான்.

சென்ற காலத்தில் இதே மாதிரி ஆசை வார்த்தைகளை இந்தியாவிடமும் காட்டிற்று; ஆனால் அப்படிச் செய்து கொண்டிருக்கும் போதே நயவஞ்சகமாகப் போருக்குத் தயாராகி அக்டோபர் 20-ந் தேதியன்று மிருகத்தனமாகத் தாக்கியிருக்கிறது.

பஞ்சசீலக் கொள்கையைச் சீனா, தனக்கு ஆதரவான போதெல்லாம் பயன படுத்திக் கொள்ளுமென்பது வரலாற்று உண்மையாகி விட்டது.

சமாதான சுகவாழ்வு என்பது சீனர்களைப் பொறுத்த வரையில் பிற நாட்டினர் அவர்களை முற்றிலும் நம்ப வேண்டுமென்பதாகும்: அதற்குப் பிறகு சீனர்கள் தங்கள் சுயரூபத்தைக் காட்டத் தொடங்குவார்கள்; ஆனால் அதை எதிர்க்கவோ, அதைப் பற்றிப் பேசவோ கூடாது.

சீனாவின் நோக்கம் நன்றாகத் தெரிந்ததுதான். போரும் போர்த் தந்திரமும் என்னும் புத்தகத்தில் மாவோ பின்வருமாறு கூறியிருக்கிறார்.

"ஒவ்வொரு கம்யூனிஸ்டும் இந்த உண்மையை மறந்துவிடக் கூடாது. துப்பாக்கியைக் கொண்டே உலகம் முழுவதையும் திருத்தியமைத்து விடலாம். நாம் யுத்தத்தைத் தடை செய்ய வேண்டுமென்று கூறுபவர்களாதலால் நமக்கு யுத்தத்தின் மீது ஆசை கிடையாது. ஆனால் யுத்தத்தின் மூலமாகத்தான் யுத்தத்தை ஒழிக்க முடியும்; ஆகவே துப்பாக்கியை ஒழிக்க வேண்டுமாயின், முதலில் நாம் துப்பாக்கியைக் கையிலெடுக்க வேண்டும்."

★



ஆசிய ஜோதியும் அமெரிக்க ஜனாதிபதியும்

# திருச்சியில் போர்க்குரல்

— வை. தட்சிணுமூர்த்தி, எம். ஏ.

"தாய்த்திரு நாட்டைத்
தறுகண் மிலேச்சர்
பேய்த்தகை கொண்டோர்
பெருமையும் வண்மையும்
ஞானமும் அறியா நவைபுரி
பகைவர்
வானகம் அடக்க வந்திடும்
அரக்கர்போல்
இந்நாள் படைகொணர்ந்து
இன்னல் செய்கின்ருர்"
"தாய்த்திரு நாட்டைத்
தகர்த்திடு மிலேச்சரை
மாய்த்திட விரும்பா வாழ்வு
மோர் வாழ்வுகொல்?
மானமொன் றிலாது மாற்றலர்
தொழும்பராய்
ஈனமுற் றிருக்க எவன்
கொலோ விரும்புவன்"?

இது மகாகவி பாரதியின் திருவாக்கு. தாய் நாட்டின் புறுதனையர், குன்றெனும் வயிரக் கொற்றவான் புயத்தராய், தட்டி எழுந்தனர் திருச்சி மாணவ சமுதாயத்தினர். சிறுமை தீர நம் தாய்த் திரு நாட்டைக் காப்பதில் சேர்ந்திங்குழைப்போம் என மாணவியரும் படை திரண்டனர். திருச்சியின் தெருக்களில் எழுந்தது போர்க்குரல், புத்தகம் ஏந்தும் கைகள் போர்க் கருவிகளை ஏந்தவும் தயார் என்ற அவர்களின் உறுதியொலி விண்ணை முட்டியது. இல்லை! இல்லை! அவ்வொலி இமயத்துப் போரிடும் நம் எதிரிகட்கும் எட்டி நடுக்கத்தை உண்டாக்குகிறது என்ருர் நமது முதல்மைச்சர் காமராஜ்.

"புறப்படு மகனே புறப்படடா
போர்க்களம் நோக்கிப்
புறப்படடா
பொறுத்தது போதும்
புறப்படடா"

என்ற போர்ப்பாட்டு கல்லூரி மாணவியரின் அணிவகுப்புப் பாடலாக நின்றது.

"மங்கையர் குலமே தங்கங்கள்
தாரீர்"
"நன்றி கெட்ட சீனுவை
நாட்டைவிட்டு விரட்டுவோம்"
"இந்திய மண்ணில் அன்னி
யர்க்கு இடங்கொடோம்"
"தலையைக் கொடுத்தேனும்
தாய்நாட்டைக் காப்போம்"
"சீனுவை விரட்டச் சேர்வீர்
படையில்"

என்பனவாய ஆவேச மொழிகள் பொறிக்கப்பட்ட அட்டைகள் மாணவ மாணவியரின் கைகளிலே உயிர் பெற்றன. சங்ககாலம் மற்றும் சரித்திர காலங்கள் கண்டிராத ஒரு போர் அணிவகுப்பில் முதலமைச்சர் காமராஜ் அவர்கள் உருக்கப் புன்முறுவலோடு முன்னேடியாக கூப்பிய கைகளுடன் பாரதத்தின் பெருமையைக் காக்க உள்ளுருக்கத்தோடு அறியாச் சிறுவன் முதல் தொண்டுக் கிழவர் வரை ஏழை பாட்டாளி முதல் செல்வந்தர் வரை பலரும் தாமே கொணர்ந்து தரும் போர் நிதிக் கொடைகளைப் பெற்ற வண்ணம் நடந்துக் கொண்டிருந்தார். மாலையில்லை, தோரணங்கள் இல்லை, வாத்தியங்கள் இல்லை. இளைய பாரதத்தின் எழுச்சிக்குரல் மட்டும் ஓயாது வெற்றிப் பேரிகையாக முழங்கி வந்தது.

சூசையப்பர் கல்லூரி மாணவர் தேசீயப் படையினர் முதல் அணிவகுப்பாக வீர நடை போட்டு வர, அனைத்துக் கல்லூரிப் படையினரும் தத்தமக்குரிய சிறப்புக்களோடு போர்க்கோலத்தில் வந்தனர். புனித சிலுவை, சீதாலக்ஷ்மி கல்லூரிகளின் மாணவியரின் படை அணிவகுப்புக்களைக் கண்ட, மக்கள் வெள்ளம் இந்த நாட்டைப் பிடித்த கலி நிச்சயம் தீரும், இளைய தாய்க்குலமும் தயாரா எனக்கூறி மூக்கில் விரல் வைத்தனர். பல்வேறு உயர்நிலைப் பள்ளிகள், பயிற்சிக் கூடங்களின் மாணவ மாணவியர் படையினிற் சேராதவராயினும் பயிற்சி பெருப் படைவீரர்களாயினும் நாங்கள் பாரதத்தைக் காக்கும் ஊக்கத்திலே, தானே படைப் பயிற்சி கொண்டு விட்டோம் எனக் கூறுவது போன்றே சாரை சாரையாக அணியிற் சென்றனர். வெள்ளை, பச்சை, நீலம் எனப் பலவேறு நிற அணிகளைப் பார்க்க நமது வீரத் தாயின் பன்னிறத் திருக்கோலம், மாலை வெயிலில் பொன்னொளி பெற்றது. மாணவர் தம் நெஞ்சக் குமறலை உணர்ந்த தெப்பக்குளம் தானும் கொதிக்கலாமோ என எண்ணி நொந்து கொண்டிருந்தது,

மாபெரும் அணி வகுப்பைக் கண்ட உச்சிப் பிள்ளையார் "இப்படை தோற்கின் எப்படை ஜயிக்கும்" என்று தன்னை நாடி வரும் பக்தர்கட்குக் கோலத்தால் கூறி இருந்தார். இவ்வணியின் கார்டு கேட் முனையைக் கடக்க மட்டும் ஒரு மணி நேரம் பிடித்த தென்ருல் நீளம கூறவேண்டுமா? 14-11-62 புதன்கிழமை மாலை புறப்பட்ட இம் மாணவர் அணி இரவு ஆறரை மணி அளவில் சூசையப்பர் கல்லூரி மைதானத்தை அடைந்தது. எங்கெங்கு காணினும் சிகப்புக் குஞ்சம் தைத்த தொப்பிகள் கரை புரண்டது மாணவர் வெள்ளம்.

தாய்நாட்டின் மானங் காக்க எழுந்த இளைஞர்கள் ஒலிபெருக்கிகட்கு முன் வருகின்றனர்.

முதலில் பெண்கள்,

"கொட்டடா கொட்டடா" என்ற பேரிகைப் பாடலைப் பாடினர். மற்ருெரு தொகுதியினர் "அச்சமில்லை அச்சமில்லை" என்று பாடினர். மூன்ருவது தொகுதியினர் "எழுக எழுக வீரரே" என முழங்கினர். வீரர்கள் எழுந்தனர். சூசையப்பர் கல்லூரி மாணவர்:

"பகைமைக் காரிருள் சூழ்ந்த இந்நேரத்தில் வீரர்களே செங்குருதி மழை பொழிய வாருங்கள்! புலியென எழுந்து நாம் அலையென மோதிப் புறப்படுவோம். அடக்கமாக இருப்பினும் நாம் அடிமைகளாக மாட்டோம். சுதந்திரம் நமக்குயிர். சுவாசம் மற்றில்லை. கத்தியின்றி ரத்தமின்றி உத்தமர் காந்தியடிகள் வாங்கித் தந்த சுதந்திரத்தை, யுத்தம் செய்து ரத்தம் சொட்டிக் காக்கப் புறப்பட்டுவிட்டோம். போராடுவோம். இறுதி சொட்டுஇரத்தம் இருக்கும் வரை போராடுவோம்" என்று கர்ஜனை செய்தார்.

இளைய தாய்க்குலத்தின் முதல்மகளாக, சீதாலக்ஷ்மி கல்லூரி மாணவி,

இராவணன் ஆண்டாலென்ன? இராமன் ஆண்டாலென்ன என்ற காலம் போய்விட்டது. தேச பக்தி இருப்போர், இறுதி சொட்டு இரத்தம் இருக்கும் வரை மட்டுமல்ல, இறுதிக் குடிமகன் இருக்கும் வரை போராடுவோம். ரத்தம் கொதிக்கின்றது. வாழில் முப்பது கோடியும் வாழ்வோம். வீழில் முப்பது கோடியும் வீழ்வோம்" என்று முழங்கினுர்.

### தேசீயக் கல்லூரி மாணவர்

"சீனுவை நோக்கிப் புறப்படுங்கள். சீனு தாழ்ந்து விடும்" என்று ஆவேசமாக ஆங்கிலத்தில் பேசினுர்.

தாய்க்குலத்தின் இரண்டாவது மகளாக புனித சிலுவைக் கல்லூரி மாணவி தொடங்கும பொழுதே போர்செய்யத் தயாராயிருக்கும் மாணவர்களே! என்று தொடங்கி,

"ஓராயிரமாண்டு ஒய்ந்து கிடந்த பின்னர் வாராது போல வந்த மாமணியைத் தோற்கமாட்டோம். வீர சிதம்பரனுரின் மேலாணை. உயிரைக் கொடுத்து கொடியைக் காத்த குமரன் பிறந்த நாட்டிற் பிறந்த நாங்கள் உயிரைக் கொடுத்து நாட்டைக் காப்போம். நான் என்ன செய்ய வேண்டும் என்ற கேள்விக்கே இடமில்லை" என வஞ்சினம் கூறினுர்.

### ஜமால் மூகமது கல்லூரி மாணவர்,

"சுதந்திர இந்தியாவில் பிறந்து வாழும் நாங்கள் அடிமைகளாகிவிட மாட்டோம். வீரவுணர்ச்சி எங்களிடம் அழிந்துவிட வில்லை" என்று சாற்றினுர்.

### சாவித்ரி வித்தியாசாலை மாணவி,

"அன்று அசுரர்கட்கும் தேவர்கட்கும் போர் நடந்தது. இன்று ஏகாதிபத்தியத்துக்கும் ஜனநாயகத்துக்கும் போர் நடக்கிறது. எதிர்கால பாரதத்தின் மன்னர்களாகிய நாங்கள் இப்பொழுதே தயார்" என்ருர்.

எஸ். எம். உயர்பள்ளி மாணவன் வயதிற் சிறியவனுயினும் வீராவேசம் மிக்கவனுய்,

பாம்பு, கொசு, பூச்சி, தவளைகளைப் பிடித்துத் தின்னும் சீனர்கட்கு அறிவு மழுங்குகிறது. சமாதானம் பேசும் எங்கட்குச் சண்டை செய்யவும் தெரியும் என்பதைக் காட்டுவோம். எங்களுக்கும் ராஜதந்திரம் தெரியும், சொல்லப் பயன் படுவோர் சான்ருேராகட்டும். சொல்லம் பயன் படும் வீரர்களாவோம் நாம். சிறுவர்களாக இருக்கின்ற நாங்கள் சண்டை செய்யும் வரை போர் நீடித்தாலும் நாங்கள் தயார்" என்று முரசறைந்தார்.

மற்றும் சில மாணவர்கள் பேசிய பின்னர், முதலமைச்சர் மூத்தாய்ப்பு வைத்தார்.

"திருச்சியில் நீங்கள் முழங்கும் குரல்கள் இமயத்தில் முழங்கிக் கொண்டே இருக்கும். உங்களின் முழக்கததால் பகைவர்க்கு நடுக்கம் உண்டாகும். உங்களது உணர்ச்சி நல்ல முறையில் வெளிக் காட்டப் பட்டமை' நாட்டு மக்களின் உள்ளத் துடிப்பைக் காட்டுகிறது. பிரதமர் நேரு அவர்களின் பிறந்த நாளாகிய இன்று நாம் அவருக்கு பக்கபலமாக உதவி செய்வது நமது கடமை.

அவசர காலத்தில்தான் நாம் மிகவும் ஒழுங்காக நடந்து கொள்ள வேண்டும்" என்றெல்லாம் பேசிய பின்னர்'

பெண்கள் "புறப்படு மகனே புறப்படடா" எனப் பாடினர். தலைவர்கள் அழைக்காது எவ்வாறு புறப்படமுடியும், இவ் வீரத் திருக்கோலத்தைக் கண்டுவிட்ட நமக்கு தூக்கம எங்கே வரப் போகிறது.

வம்மின்! வம்மின் வீரரே!
நாமினி
இம்மெனும் முன்னமிவ்
விந்திர லோகமும்
செல்லுவம்! ஏறுமின்!
வெல்லுவம்!

★







சிதம்பரம் டி. மு. கோ.
O. P. 51/62

1. சாரதாம்பாளம்மாள், 2. முத்துக்குமரசாமி பிள்ளை, 3. மைனர் செல்வராணி. 4. மைனர் இந்திராணி. மைனர் மனுதார்கள் 3to5 By அடுத்தசனேகிதர் தயார் (1மனுதார்) —மனுதார்கள்
ரெஸ்பாண்டெண்ட்ஸ் —Nil

மனுதார்கள் ரூ. 970-00க்கு வார்சு சர்டிபிகேட் கிடைக்க வேணுமென்று மனுக்கொடுத்து 30-11-62ல் ஈரங்கி. ஆக்ஷேபனை உள்ளவர்கள் ஆஜராகி தெரிவித்துக்கொள்ள வேண்டியது.

R. திருமலாச்சாரியார்
1/5314/122 அட்வகேட்

### சைனாவின் முகமூடி கிழிந்தது

# பாட்டாளி மக்களும் பீகிங் பண்டிதர்களும்

ரிக்ஷா இழுப்பவர்கள் பாட்டாளியா அல்லது முதலாளியா ?

மேஜோடு துடைப்பவர்கள் இவற்றில் எந்த வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் ? பீகிங் பரிபாஷையில் பரிச்சயமில்லாத நம் மக்களுக்கு இது ஒரு அர்த்தமில்லாத கேள்வியாகத்தான் தோன்றும். ஏனெனில், இந்தியாவில் இவர்களும் மற்ற பிரிவினரைப் போல இந்நாட்டு மக்களே; சீன ஆக்கிரமிப்பாளரை அடித்து விரட்டுவதில் இவர்கள் உட்பட எல்லாப் பிரிவினருமே ஒன்று பட்டு நிற்கின்றனர். நம்மைப் பொறுத்த வரையில் இது சரிதான்.

ஆனால், சீன கம்யூனிஸ்டுகளுக்கு, இந்தக் கேள்விகளுக்கு அவசரமாக விடையளித்துத்தான் ஆக வேண்டும். டில்லியிலுள்ள பாட்டாளி மக்கள் சமீபத்தில் நடந்துகொண்ட விதத்தைக் கண்டு, சீன கம்யூனிஸ்டுகள் மனம் வெதும்பித்தான் போயிருக்க வேண்டும்; ஏனெனில் அவர்களுடைய சிந்தனைச் சிற்பிகளின் கற்பனையில் தோன்றிய கோட்டைகளையெல்லாம் இந்தப் பாட்டாளி மக்கள் தகர்த்தெறிந்து விட்டனர். சுமார் மூவாயிரம் ரிக்ஷாக்காரர்கள் ஒன்று கூடி, அமைதியான ஊர்வலம் நடத்தி, பிரதம மந்திரியின் இல்லத்துக்குச் சென்று, அன்றைய தினம் தாங்கள் சம்பாதித்த பணம் முழுவதையும், பாதுகாப்பு நிதிக்குத் தங்களுடைய காணிக்கையாகக் கொடுத்தனர். மேஜோடு துடைத்துப் பிழைப்பு நடத்தும் பையன்கள் தங்களுடைய இரண்டு நாள் சமபாத்தியததை பாது காப்பு நிதிக்கு அளித்தனர்.

பீகிங் மக்கள் தினசரிப் பத்திரிகை சமீபத்தில் வெளியிட்டதொரு கட்டுரையில், "முதலாளித்துவ தேசியமும், பாட்டாளி வர்க்க சர்வதேசியமும், அடிப்படையிலேயே ஒன்றுக்கொன்று விரோதமான இரண்டு உலகப் போக்குகள். முதலாளித்துவ தேசியம், ஏதேச்சாரிகாரத்துடன முரண்பாடுகள் கொண்டிருப்பது காரணமாக, ஏதேச்சாதிகார எதிர்ப்புப புரட்சியில் பங்கெடுத்துக் கொள்ளக் கூடும்" எனறு எழுதியிருந்தது. ஆனால், "உள்நாட்டு நிலப் பிரபுத்துவத்தையே ஆதாரமாகக் கொண்ட நலன்களை உடைய முதலாளி வர்க்கம், இறுதியில் புரட்சியைக் காட்டிக் கொடுத்து விடும்; மக்களையும், கம்யூனிஸ்ட் கட்சியையும், முற்போக்கு சக்திகளையும் அடக்கி ஏகாதிபத்தியத்திடம் சரணடைந்து விடும்" என்று செஞ்சீன தத்துவ வாதிகள் திருப்தியடைந்துள்ளனர்.

திரு. நேரு, இம்மாதிரியானதொரு பிற்போக்கு தேசியக் கொள்கையையே பின்பற்றி வருவதாக பீகிங் பண்டிதர்கள் கூக்குரலிடுகின்றனர்.

ஆனால், அவர்கள் வெகு அழகாகத் திரித்து வந்த இந்தச் சரட்டிலே, ஏதோ கோளாறு ஏற்பட்டு விட்டதுபோல் தோன்றுகிறது. இந்திய மக்கள் பீகிங் கொள்ளைக்காரப் படையினரை வரவேற்கக் காத்துக்கொண்டிருப்பதாக அவர்கள் பறை சாற்றிக் கொண்டிருந்தனர். தாங்லா மலைப் பகுதிக்குக் கீழே நமது சிறு காவல் நிலையமொன்றை "ஹிந்தி-சீனி பாய் பாய்" கோஷத்தைப் போட்டு, எளிதில் கைப்பற்றிவிட அவர்கள் முயன்ற வேடிக்கைக் கதையொன்று, இப்போது வெளியாகியிருக்கிறது. அங்கிருந்த நம் படைவீரர்கள், அந்த கோஷத்தைக் கேட்டு மயங்கி அப்படியே அந்த இடத்தை இவர்கள் ஒப்படைத்துவிடுவார்கள் என்று மனப்பால் குடித்துக் கொண்டிருந்தனர்.

ஆனால், அந்தச் சிறிய இடத்தைப் பிடிப்பதற்கு சீனர்கள் இறுதியில் இரண்டு பட்டாலியன்களை உபயோகிக்க வேண்டியதாயிற்று. பாட்டாளி மக்கள் முதலாளி வர்க்கத்தினரைப் போல நடப்பதைக் கண்டு அவர்கள் ஆத்திரமடைந்துதான் இருக்கவேண்டும்; டில்லி ரிக்ஷாக்காரர்கள் மட்டும் என்ன; பம்பாய் போக்குவரத்து- துறைமுகத் தொழிலாளர் சங்கம் தேசிய பாதுகாப்பு நிதிக்கு ரூபாய் 60,000 திரட்டிக் கொடுக்க முடிவு செய்திருக்கிறது; அகில இந்திய ரயில்வே ஊழியர் சம்மேளனம் இரண்டு கோடி ரூபாய் சேர்த்துக் கொடுக்கப் போகிறது; இந்திய தேசிய தொழிற்சங்க காங்கிரஸ், சீன ஆக்கிரமிப்புக்கு எதிர்ப்பைத் தெரிவித்து டில்லியில் மாபெரும் ஊர்வலம் ஒன்றை நடத்திற்று.

இவை எல்லாவற்றையும் விட, இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தீர்மானம் சீனருக்குப் பேரதிர்ச்சியை உண்டுபண்ணியிருக்கும். கம்யூனிஸ்ட் கட்சியின் அதிகார பூர்வமான தீர்மானம், ஆக்கிரமிப்புச் செய்திருப்பதாகக் குற்றங்காட்டி சைனாவைக் கண்டனம் செய்திருக்கிறது. அக்கட்சியின் பத்திரிகையும் இத் தீர்மானத்தை முதல் பக்கத்தில் கொட்டை எழுத்துக்களில் அறிவித்தது.

இவ்விஷயத்தில் ஓரளவு கருத்து வேற்றுமை கொண்ட இந்திய கம்யூனிஸ்டுகள் ஒரு சிலர் இருக்கக்கூடும். ஆனால், அவர்கள் முற்றிலுமாக ஒதுக்கப்பட்டு விட்டனர்.

பார்லிமெண்டிலுள்ள கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினர்களும், மற்ற அங்கத்தினர்களைப் போலவே, ஒரு மாத சம்பளத்தை தேசிய பாதுகாப்பு நிதிக்கு வழங்கியுள்ளனர். சென்னையிலுள்ள கம்யூனிஸ்ட் கட்சிப் பிரிவு நவம்பர் 14-ந் தேதியை, பாதுகாப்பு தினமாகக் கொண்டாடியிருக்கிறது.

சர்வதேச கம்யூனிஸ்ட் இயக்க வரலாற்றிலே, இந்தியா உண்டுபண்ணியுள்ள இணையற்ற இந்தப் புதிய திருப்பத்தைக் கண்டு பீகிங் பண்டிதர்கள் வாய் புளித்துப் போயிருக்கவேண்டும். ஒரு நாடு, கம்யூனிஸ்ட் நாடு ஒன்றுக்கு எதிராக உபயோகிப்பதற்கு மேற்கு நாடுகளிலிருந்து ஆயுதங்கள் இறக்குமதி செய்வதை, அந்த நாட்டின் கம்யூனிஸ்ட் கட்சி ஆதரிப்பதென்பது கம்யூனிஸ்ட் இயக்கத்தின் வரலாற்றிலேயே நிகழாத ஒரு சம்பவமாகும்.

ஒரு விதத்தில் பீகிங்கின் சித்தாந்தம் சரியானதென்று நிரூபிக்கப்பட்டு விட்டதென்றே சொல்ல வேண்டும். 'எந்த நாட்டிலும் முற்போக்கு சக்திகள் ஏதேச்சாதிகாரத்தை எதிர்த்துப் போராடும்' என்று பீகிங் அழுத்தந்திருத்தமாகக் கூறியிருக்கிறதல்லவா ? இந்தியாவில் இன்று அதைத்தான் நாம் செய்து கொண்டிருக்கிறோம். செஞ்சீன ஏகாதிபத்தியம் தடுத்து நிறுத்தப்பட்டு விட்டது; நமது எல்லையை மீறி வந்த சீனப் படைகளை, இந்தியாவின் எல்லைகளுக்கு அப்பால் விரட்டியடிக்கும் மாபெரும் முயற்சியில் நாடு முழுவதுமே திரண்டு நிற்கிறது.

★

## சைனாவின் துரோகக் கதை

நமது பிரதம மந்திரி ஸ்ரீ ஜவஹர்லால் நேரு, இந்தியாவின் மீது சீனா படையெடுப்பு செய்திருப்பது பற்றி உலக நாடுகளின் தலைவர்களுக்கு அக்டோபர் 26-ந் தேதியன்று கடிதம் எழுதிய போது, மிகுந்த மனவேதனையுடன் தான் அவர் அதைச் செய்யவேண்டியிருந்தது.

சீனர்கள் இந்தியாவுடன் கொண்டிருந்த உறவில், 'நன்மைகளுக்கெல்லாம் பிரதியுபகாரமாகத் தீமையையே இழைத்திருப்பது பெரிதும் வருந்தத்தக்கதொரு விஷயமாகும்' என்று மனம வெதும்பி எழுதியிருக்கிறார் 'இந்தியா சுதந்திரமடைந்தது முதல் சைனாவின் நேசபாவமும், சமாதானமும் நிறைநத உறவே எங்களுடைய அடிப்படையான கொள்கையாக இருந்து வந்திருக்கிறது; இந்த கொள்கையையே நெடுகிலும் கடைப்பிடித்து வந்திருககிறோம்; வலுவில் சென்று உலக அரங்கிலே சைனாவின் கட்சியை எடுத்துச் சொல்லி வந்திருக்கிறோம். சைனா எங்களிடத்தில் விரோத மனப்பான்மை காட்டி வருவதுடனல்லாமல், நயவஞ்சகமாகவும் நடந்து வந்திருப்பது கண்டு நாங்கள் வருந்துகிறோம்' என்று அவர் கூறியிருக்கிறார்.

இந்தியா நெடுநாட்களாக நட்புறவை வளர்க்க பாடுபட்டு வந்த ஒரு அண்டை நாட்டின் துரோகச் செயல் பற்றி பிரதம மந்திரி சமீபத்தல் சில நாட்களாக, வேறு பல சந்தர்ப்பங்களிலும் மன வேதனையை வெளிப்படுத்தியிருக்கிறார். இந்தியாவின் மீது ஆக்கிரமிப்புச் செய்து சைனா கடைசியாக இழைத்துள்ள துரோகச் செயலைப் பொறுக்கமாட்டாமல், பிரதம மந்திரி தமது உள்ளக் குமுறலை இவ்வாறு வெளிப்படுத்தியிருக்கிறார்.

கடந்த பத்து ஆண்டுகளாக இந்தியாவினிடத்தில் சைனா நடந்து கொண்டு வந்திருக்கும் விதத்தைப் பார்க்கும்போது, சமாதானத்தையே விரும்புவதாக சதா காலமும் பேசிக்கொண்டிருந்து, திரை மறைவிலே அது தாக்குதலுக்கு ஆயத்தம் செய்து கொண்டு வந்திருப்பது புலனாகிறது.

சீன மக்களின் குடியரசு 1949, அக்டோபர் முதல் தேதியன்று அறிவிக்கப்பட்டபோது, அந்த ஆட்சிக்கு, முதலில் அங்கீகாரம் அளித்த நாடுகளில் இந்தியாவும் ஒன்று; அதுவே புதிய ஆட்சிக்கு இந்தியாவின் முதல் பரிசு. ஆனால், அதற்கு ஒரு வருஷத்துக்குள்ளாகவே சைனா 'சீனா-இந்திய எல்லையை உறுதிப்படுத்துவது' பற்றிப் பேசத் தொடங்கிவிட்டது. எல்லை என்னவோ ஏற்கெனவே நன்கு உறுதிப்படுத்தப்பட்டிருந்தது. 1950-ல் சைனாவுக்கும் திபேத்துக்குமிடையே தகராறு ஏற்பட்டபோது, இந்தியா உலக அமைதிக்குப் பங்கமேற்படாமல் இருக்க வேண்டுமே என்ற கவலையில், அந்தத் தகராறை சமாதானமாகவும், நேசபாவத்துடனும் தீர்த்துக் கொள்ளலாம் என்று சீன அரசாங்கத்துக்கு யோசனை கூறிய போது, அவர்கள் கூறிய பதில் நமக்கு அதிர்ச்சியைத்தான் கொடுத்தது. 'திபேத்தில் சைனாவுக்கு எதிரான வெளிநாடுகளின் பேச்சில் நீங்கள் மதி மயங்கிவிட்டீர்கள்' என்று அவர்கள் பதில் கொடுத்தார்கள். ஆதாரமற்ற அந்தக் குற்றச்சாட்டைக் கேட்டு இந்தியா அதிர்ச்சியடைந்தது, திபேத் பிரச்னை அமைதியான முறையில் தீர்க்கப்பட வேண்டுமென்பதைத் தவிர வேறு எந்த விதமான எண்ணமும் நமக்குக் கிடையாது என்று பதில் சொன்னோம்.

சைனாவை ஐ. நா.வில் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று இடைவிடாது வாதாடி வந்தோம். சைனா சம்பந்தப்பட்ட விஷயங்கள் பற்றிப் பேசுவதற்கு சீன மக்கள் குடியரசுக்குத்தான் உரிமை இருக்கிறது என்று கூடச் சொன்னோம். 1954-ல் திபேத்தை சைனாவின் ஒரு பகுதியாக இந்தியா அங்கீகரித்தது. திபேத்தில் இதுவரையில் அனுபவித்து வந்த சலுகைகளையும் உரிமைகளையும் விட்டுக் கொடுத்தது. 'உலகத்தில் அமைதி நிலவச் செய்வதற்கும், நல்லெண்ணத்தை வளர்ப்பதற்கும் இந்தியா பறை சாற்றி வந்த 'பஞ்ச சீல'க் கோட்பாடுகளையே பின்பற்றி நடப்பதாக சைனாவும் இந்தியாவுடன் ஒப்பந்தம் செய்து கொண்டது. இரண்டு நாடுகளுக்குமிடையே தகராறுக்குட்பட்ட விஷயம் எதுவுமே கிடையாது என்று அப்போது நினைந்தோம். அப்படியே, வருங்காலத்தில் ஏதேனும் ஏற்பட்டாலும் ஒருவருக்கொருவர் நல்லெண்ணத்துடன் பேசிக் கொள்வதன் மூலம் அதைத் தீர்ந்துக் கொண்டு விடலாம் என்றும் நினைத்தோம்.

1954ல் மி. சூ. என். லாய் இந்தியாவுக்கு வந்தார். இரண்டு நாடுகளின் பிரதம மந்திரிகளும் கூட்டாக வெளியிட்ட அறிக்கையில் அவரும் கையெழுத்துப் போட்டார். "பஞ்ச சீல நெறிகளை, பல்வேறு நாடுகளுக்கிடையே மாத்திரமல்லாமல் பொதுவாக சர்வதேச உறவுகளிலேயும் கூடப் பின்பற்றினால், உலக அமைதிக்கு உறுதியான அஸ்திவாரம் அமைந்துவிடும்" என்று அந்த அறிக்கையில் கூறப்பட்டிருந்தது. இது நிகழ்ந்தது 1954 ஜூன் 28-ந் தேதி. அதில் போட்ட கையெழுத்து உலருவதற்குள்ளேயே, ஒரே மாதத்துக்குள் ஜூலை 17-ந் தேதியன்று, சீனத் துருப்புகள் உத்திரப் பிரதேசத்தில், பாரஹோதி பிரதேசத்துக்குள் நுழைந்து, இந்திய பிரதேசத்தில் ஒரு பகுதியின் மீது உரிமை கொண்டாடியது. சீனர்கள் பஞ்சசீலத்தைப் பயின்ற விதம் அதுதான். 1954 அக்டோபரில் பிரதம மந்திரி ஸ்ரீ நேரு, இரு நாடுகளுக்குமிடையே நட்புறவை வளர்த்துப் பேணும் தமது கொள்கையையொட்டி, சைனாவுக்கு விஜயம் செய்தார். அவர் அங்கு தங்கியிருந்தபோது, சைனாவில் வெளியிடப்பட்டுள்ள பூகோளப்படங்களில், இந்தியாவுக்கும்சைனாவுக்குமிடையேயுள்ள எல்லைக் கோடு தவறாகக் குறிப்பிடப்பட்டிருப்பதையும் இந்தியப் பிரதேசத்தில் சுமார். 50,000 சதுர மைல் சைனாவில் சேர்த்துக் கொள்ளப்பட்டிருப்பதையும், சீனத் தலைவரிடம் சுட்டிக் காட்டினார். அந்தப் படங்கள் பழைய கோமிடாங் படங்களின் பிரதிகளே யென்றும், அவற்றைத் திருத்தி வரைவதற்கு இதுவரை தங்களுக்கு அவகாசம் கிடைக்கவில்லையென்றும், அவர் அதற்குப் பதில் சொன்னார். ★




ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

மலர் 28 | 25—11—1962 | வாரம் 3

# உபதேசங்கள்

கூட்டு சேராக் கொள்கையை இன்னமும் சொல்லிக் கொண்டிருப்பது நாகரிகமில்லை என்று பொது நியாயம் சொல்லிக் கொண்டிருக்கிருர்கள் ராஜாஜி போன்ற பெரியவர்கள். தேசமே காங்கிரசுக்கு மட்டும்தான் சொந்தமென்ற போக்கை விட்டு விட்டு மற்றவர்களையும் பொறுப்பில் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்பதும்இவர்கள் கருத்து.

இந்த இரண்டு யோசனைகளுக்கும் இப்பொழுது ஒரு விதமான அவசியமும் அவசரமும் ஏற்பட்டு விடவில்லை. கூட்டு சேராவிட்டால் உதவி செய்யமாட்டோம் என்று யாரும் நம்மை நிர்ப்பந்திக்கவில்லை. அப்படி ஒரு நிர்ப்பந்தம் ஏற்பட்டால், அப்பொழுது இந்தக் கொள்கையைப் புனராலோசனை செய்து கொள்ளலாம். அதுவரையிலும் புதிதாக ஒரு அவசரமும்வந்துவிடவில்லை. மேலும் இன்று ஏற்பட்டுள்ள விவகாரம் இந்தியாவுடன் மட்டும் நேர்ந்துள்ள சீனப் போர் என்று உலகம் எண்ணவில்லை. ஜனநாயகத்துக்கும்–கம்யூனிஸத்துக்கும் ஏற்பட்டுள்ள பலப் பரிட்சை யென்று உலகம் இதை எடுத்துக்கொண்டுள்ளது. எனவே நமக்குக் கிடைக்கும் உதவி, மற்றவர் தரும் யாசகம் போல அல்ல. அவர்களுக்கும் இதில் பங்குண்டு என்ற உணர்வினுல் அவர்கள் நம் கையை பலப்படுத்துவது கடமையாகக் கருதுகிருர்கள்.

காங்கிரசுக்கு தேசம் சொந்தமென்று கொண்டு என்ன காரியம் நடக்கிறது? ஏட்டிக்குப் போட்டி சொல்லிக் கொண்டிருப்பவர்களையும் கூடவே காலில் கட்டிக் கொண்டு அரசாங்கம் நொண்டி யடிக்க வேண்டும் போலிருக்கிறது.

பாதுகாப்புச் சட்டம் வந்து ஜீவாதார உரிமைகளை விழுங்கியது சரியில்லை என்பது ஒரு குற்றச்சாட்டு.

வெறும் வாயை மெல்லக் கூடிய நமது அரசியல் கட்சிகள் இந்த நேரம் சுதந்திரமாகப் பேசவும் எழுதவும் தொடங்கினுல் உள்நாட்டுக் குழப்பம் வேறு சேர்ந்து விடும்.

எல்லாம் இப்பொழுது போய்க் கொண்டிருப்பது போல் போகவிட்டு, ஆக்க பூர்வமாக உதவி செய்ய முன்வரவேண்டுமே யல்லாது, தர்க்கங்களும், புத்தி மதிகளும் கூறிக் கொண்டு நாட்டின் கவனத்தைச் சிதறடிப்பதில் என்ன லாபம்? கொஞ்சகாலத்துக்கு பேச்சுரிமை யெல்லாம் பாராளுமன்ற எல்லைக்குள் மட்டும் இருந்தால் போதாதா? நல்லதோ கெட்டதோ ஒரு தலைமையை நம்பி ஏற்றுத் தானே நடக்க வேண்டும். அத்தகைய தலைவர் நேரு வைத்தவிர வேறுயார்தான் இருக்கிருர்கள்!

★



# கண்ணோட்டம்

—ரா. நா.

போர் நிலை மிகவும் மோசமாக இருக்கிறது. எதிரிகள் ஆள் சேதத்தையும் கவனியாமல் தங்கள் ஆக்ரமிப்பைத் தொடர்ந்து நடத்துகிருர்கள். ஆனுல் நமது படையோ நாட்டு மக்களோ மனம் தளரவில்லை. நம் தலைவர் பிரதமர் நேரு இந்த கவலைக்கிடமான நிலை பற்றி ரேடியோவில் பேசினுர்.

“சீனர்களை விரட்டியடிக்கும் வரை நாம் வாளாயிருக்க மாட்டோம் என சங்கற்பம் செய்து கொள்ள வேண்டும், நீங்கள் எல்லோரும் இம்மாதிரி சபதம் செய்து கொள்ள வேண்டும் என நான் விரும்புகிறேன். எதிரியின் ஆரம்ப வெற்றிகளைக் கண்டு நீங்கள் மனம் தளரலாகாது. இந்த சங்கற்பத்தை இறுதிவரை காப்பாற்ற வேண்டும். எதிரியை எதிர்த்து நிற்கா விட்டால் நாம் கடமையிற் தவறுபவர்களாவதுமின்றி ஆபிரிகா, ஆசியா, ஐரோப்பா, அமெரிக்கா முதலிய கண்டங்களில் உள்ள மக்கள் சுதந்திரம் இழக்கச் செய்தவர்களாவோம்.”

எப்படியாவது நாட்டைக் காக்க வேண்டும் என்று அல்லும் பகலும் அனவரதமும் நம் நேரு பாடுபட்டு வருகிருர். இந் நாட்டில் பிறந்த யாவரும் அவருக்குப் பக்கபலமாக இருந்து நம் கண்ணிலும் இனிய சுதந்திரத்தைப் பாதுகாக்க வேண்டும்.

நமது கடமையை எப்படி நிறைவேற்றுவது என்பதற்கு நம் முதலமைச்சர் சிறந்து வழிகாட்டியாக விளங்குகிருர். நகரில் கல்லூரிகளுக்கெல்லாம் சென்று பாதுகாப்பு நிதிக்குப் பணம் சேர்க்கிருர். மாவட்டங்களில் சென்று பணம் திரட்டுகிருர்.

கோவை, திருச்சி, மதுரை மாவட்டங்கள் அவரிடம் பொன்னையும் பணத்தையும் வாரி வாரி வழங்கியுள்ளனர். இன்று தமிழகத்தில் மக்கள் நாட்டின் பாதுகாப்பிற்காக எதையும் தியாகம் செய்யத் தயாராயிருக்கின்றனர் என்ருல் அதற்கு மக்களின் நாட்டுப்பற்று மட்டுமல்ல நமது முதலமைச்சர் அளிக்கும் ஆதர்சமும்தான் காரணம். சுதந்திரப் போராட்டத்தில் தமிழகம் பெற்ற அழியாப்புகழை, பகைவனை விரட்டியடிக்கும் பணியாலும் காட்ட வேண்டும்.

எல்லோர் மனமும் ஒன்றுபட்டிருக்க வேண்டிய இவ்வேளையில் சுதந்திரா கட்சி ஸ்தாபகர் திரு. ஆசாரியார் மட்டும் நமது நடுநிலைமைக் கொள்கையைக் கைவிட வேண்டும் எனப் பிரசாரம் செய்கிருர். ஆனுல் நமது அயல் நாட்டுக் கொள்கையினுல் அதிருப்தி அடைய வேண்டிய அமெரிக்க அரசாங்கத்தின் தூதர் அந்தக் கொள்கையை மாற்றவேண்டிய அவசியமில்லை எனக் கூறுகிருர். நமது நடுநிலைமைக் கொள்கையின் விளைவாகத்தான் இன்று ரஷ்யா சீனுவை முழுமனதுடன் ஆதரிக்காமலிருக்கிறது. பிற கம்யூனிஸ்ட் நாடுகளும் நம் பகைவர்களுக்கு உதவி செய்யாமல் இருக்கின்றன. நமது தலைவரை பலஹீனப் படுத்தும் முறையில் சுதந்திரா கட்சியாளர் பேசுவது நாட்டின் பாதுகாப்பிற்கு இடைஞ்சல் செய்வதாகும் என்பதை அவர்கள் உணர வேண்டும்.

இந்த சந்தர்ப்பத்தில் எகிப்து தலைவர் கர்னல் நாஸர் இந்தோ–சீன சமரஸ முயற்சியைத் தொடர்ந்து வருகிருர் என்கிற செய்தி ஓரளவு ஆதரவளிக்கிறது.

இரண்டும் கெட்ட நிலையிலிருந்த கானு அதிபர் நிக்ரூமாவும் எகிப்து முயற்சியை ஆதரிப்பதாகத் தெரிகிறது. செப்டம்பர் 8-ம் தேதி சீனர்கள் இருந்த இடத்திற்குப் பின்வாங்கிச் சென்றபின்தான் சமரஸப் பேச்சு சாத்யம் என்கிற இந்திய அபிப்பிராயத்தை நாஸர் ஆதரிக்கிருர் என்பது யாவரும் அறிந்த விஷயம்.

நாஸர் ஆதரவை சூ-என்லாய் நாடுகிருர் என்று தெரிகிறது. ஆகையால் எப்படியாவது சமரஸம் செய்து கொள்ளவேண்டும் என்று சீனப் பிரதமர் எண்ணுகிருர். ஏனெனில் சீனர்களுக்கு சாம்ராஜ்ய வெறி பிடித்து விட்டது என உலகமே நம்பத் தொடங்கி விட்டது.

பத்திரிகைகளைப் பிரித்தால் போர்ச் செய்திகளும், பாதுகாப்பு முயற்சி பற்றிய விவரங்களும் கண்ணைக் கவருகின்றன. பிற துறைகளில் சம்பவங்கள் நிகழ்ந்தாலும் மனம் அவைகளில் நாட்டம் செலுத்த மறுக்கின்றது.

அக்கிரமமாக, நயவஞ்சகமாக நாட்டை ஆக்ரமித்துவிட்ட அன்னியனை விரட்டியடித்துவிட்டு, கண்ணீரும், ரத்தமும் விட்டு வளர்த்த சுதந்திரப் பயிரை எப்படிப் பாதுகாப்பது என் பதிலேயே நமது சிந்தனைகள் செல்லுகின்றன. பல நூற்றுண்டுகளாக அடிமைத்தளையில் சிக்கியிருந்த நம் அன்னையை மீட்டு அரியாசனத்தில் ஏற்றி இன்னம் 15 ஆண்டுகள் ஆகவில்லை.

அதற்குள் அவளுக்கு ஆபத்து வந்து விட்டதே. வாழ்ந்தால் 45 கோடியும் வாழ்வோம் வீழ்ந்தால் 45 கோடியும் வீழ்வோம் என்று சபதம் செய்து நம் அன்னையைக் காப்போமாக!

★

## பாரதியார் 81-வது பிறந்ததின விழா

18-11-62ம் தேதியன்று கல்வி-நிதி அமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் அவர்கள் தலைமையில் கூடிய பாரதியார் 81-வது பிறந்த தின விழாக்குழு கீழ்க்கண்ட முடிவுகளைச் செய்திருக்கிறது:—

‘தாய்த்திரு நாட்டைத் தகர்த்திடு மிலேச்சரை மாய்த்திட விரும்பான் வாழ்வு மோர் வாழ்வுகொல்?”

என்று போர் முரசு கொட்டி, மக்களை விடுதலைப் போராட்டத்திற்குத் தட்டி எழுப்பிய மகாகவி பாரதியாரின் 81-வது பிறந்த தின விழாவை, இன்றைய சீன ஆக்கிரமிப்பை முறியடிப்பதற்கு மக்களை ஊக்கப் படுத்தும் விழாவாகக் கொண்டாடுவதென்று தீர்மானித்திருக்கிறது. தேசிய ஒருமைப்பாட்டு நோக்கத்தை அடிப்படையாகக்கொண்டு துவக்கப்பட்ட இந்த விழா, இப்போதுள்ள நெருக்கடியான நிலையை உத்தேசித்து ஆக்கிரமிப்பை முறியடிக்கக் கூடிய முயற்சிகளுக்கு மக்களைப் பாரதியாரின் கவிதைகளைக் கொண்டு தட்டி எழுப்பும் விழாவாக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

கவிஞரின் தேச பக்தி, வீராவேசம், மக்களுக்கு மனவலி ஊட்டும் கருத்துகள், ஒற்றுமை உணர்வு, இவற்றைப் பரப்புவதே இந்த விழாவின் முதல் நோக்கமாக இருக்கும்.

விழாவின் முக்கிய நிகழ்ச்சிகளான இலக்கியக் கருத்தரங்கு, கவி அரங்கு, பாரதி கண்காட்சி, மாபெரும் ஊர்வலம், கடற்கரைப் பொதுக் கூட்டம், முதலிய எல்லாவற்றிலுமே சீன ஆக்கிரமிப்பை முறியடிக்கக் கூடிய எழுச்சிமிக்க கருத்துக்கள் வலியுறுத்தப்படும். தமிழ் நாட்டிலுள்ள கவிஞர்கள், எழுத்தாளர்கள், சிந்தனையாளர்கள் முதலியவர்களின் சக்தியை ஒன்று திரட்டி ஆக்கிரமிப்பாளரை விரட்டி அடிக்கும் முயற்சிகளில் ஈடுபடுத்துவது இதன் பிரதான அம்சமாகும்.

இந்த இலட்சியத்தை அடிப்படையாகக் கொண்டு டிசம்பர் 9-ம் தேதி முற்பகலில் விழா துவங்கப் பெறும். ஆந்திர மாநில முதலமைச்சர் திரு. சஞ்சீவ ரெட்டி அவர்கள் விழாவைத் துவக்கி வைக்கவும், டாக்டர் சி. பி. ராமஸ்வாமி அய்யர் அவர்கள் விழாவுக்குத் தலைமை வகிக்கவும் இசைந்திருக்கிருர்கள்.

சென்னைக் கல்லூரி மாணவர்களுக்கு நடத்தப்பட்ட பேச்சுப்போட்டியில் வெற்றி பெற்ற மாணவர்களுக்கும், சென்னை உயர்நிலைப் பள்ளி மாணவர்களுக்கு நடத்தப்பட்ட கட்டுரைப் போட்டியில் வெற்றி பெற்ற மாணவர்களுக்கும் முதலமைச்சர் திரு. காமராஜ் அவர்கள் பரிசு வழங்குவார். காஷ்மீரி, வங்காளம், மராத்தி, சிந்தி, தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய மொழி எழுத்தாளர்களின் கருத்தரங்கு ஒன்று ஆரம்பமாகும்.

(8-ம் பக்கம் பார்க்க)

# போதுமான கையிருப்பு ஸ்திரமான விலைவாசி

★

விலைவாசியை ஸ்திரப்படுத்துவது யுத்த முயற்சியில் மிகவும் முக்கியமான அம்சமாகும். உணவு முனை சாதகமாக இருந்தால் விலைவாசி ஸ்திரமாவதற்குச் சிரமமில்லை. ஆகவே மக்களுக்கு உணவு கிடைக்கச் செய்வதற்காகவும், உணவுப் பொருள்களின் விலைகள் ஏறாமலிருப்பதற்காகவும் சர்க்கார் மேற்கொண்டுள்ள நடவடிக்கைகள் பற்றி சமீபத்தில் லோக் சபாவில் அறிவிக்கப்பட்டிருப்பது பாதுகாப்புப் பொருளாதாரத்திற்கு மிகவும் முக்கியமானதாகும்.

இந்த நடவடிக்கைகளையெல்லாம் பார்த்தால் கட்டாயமாக எதையும் சர்க்கார் தற்போது புகுத்த விரும்பவில்லை என்பது தெரியவரும். அது அவசியமே இல்லை. தற்போது நாட்டில் தோன்றியிருக்கும் தேசிய எழுச்சி, தேச விரோத நடவடிக்கை தோன்றாது என்பதற்கு உத்திரவாதமாகும். தொழில் அதிபர்களும், வர்த்தகத் துறைப் பிரமுகர்களும் விலைகளை ஸ்திரமாக இருக்கும்படிப் பார்த்துக்கொள்ளுவோம் என்று வாக்களித்திருக்கின்றனர்.

நெருக்கடி நிலைமை ஏற்பட்ட பிறகு சில பொருள்களின்விலையும் குறைந்திருக்கிறது.

இன்னொரு விஷயத்தையும் நாம் மிகவும் கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். இப்போதுள்ள தேசிய நெருக்கடி நிலை விரைவில் முடிந்து விடாது. பல ஆண்டுகள் நீடிக்கக்கூடும். இந்த சோதனை காலமும் வெகு நாட்களுக்கு நிற்கும். இன்னும் பல சிரமங்களை ஏற்கத் தயாராகயிருக்க வேண்டும். ஆகவே கூடுமானவரையில் எப்போதும் போல சாதாரணமான வாழ்க்கை ஓட்டம் இருக்கும்படிப் பார்த்துக் கொள்ள வேண்டும்.

இந்த நெருக்கடியைப் பயன்படுத்திக் கொண்டு தனிப்பட்டவர்களோ அல்லது கோஷ்டிகளோ தங்களுக்கு லாபம் தேடிக் கொள்ள முயற்சிக்கவில்லையென்பது பாராட்டத் தக்கதாகும். விலைவாசிகள் ஏறவில்லை. சரக்குகளும் மார்க்கெட்டிலிருந்து மறைந்து விடவில்லை. பதுக்கல் நடைபெறுவதாகவோ அல்லது கொள்ளை லாபம் அடிப்பதாகவோ இதுவரையில் புகார் எதுவும் இல்லை. இது நமது நாட்டு மக்களின் மனோதிடத்தைக் காட்டுகிறது. தேசப் பற்றைக் காட்டுகிறது.

நெருக்கடி காலத்தில் உணவு விலைகள் ஏற விடாமல் பார்த்துக்கொள்ளுவதாக, பல தானிய வியாபாரிகள் உத்திரவாதமளித்திருப்பதாக உணவு மந்திரி, ஸ்ரீ பாட்டில் வெள்ளிக்கிழமையன்று லோக் சபாவில் அறிவித்தார். அவர்கள் லாபத்தையும் விரும்ப மாட்டார்கள். சர்க்கார் இந்த உறுதி மொழியை மிகவும் பாராட்டியிருக்கிறது. ஆகஸ்ட் செப்டம்பர் மாதங்களில் உணவு விலைகள் இறங்குமுகமாகவே இருந்திருக்கின்றன. உணவு விலைகளை ஸ்திரமாக வைத்துக் கொள்ளுவதற்காக சர்க்கார் ஏற்கெனவே சில நடவடிக்கைகளை மேற்கொண்டிருக்கின்றனர். நியாய விலைக் கடைகள் மூலமாக ஏராளமான உணவு விநியோகிக்கப்படுகிறது. நியாய விலைக் கடைகளை அதிகரிக்கவோ அல்லது அங்குபோதுமான உணவுத் தானியமும் கிடைக்கச் செய்யவோ ஏற்பாடு செய்ய வேண்டுமென்று ராஜ்ய சர்க்கார்கள் கேட்டுக்கொள்ளப் பட்டிருக்கின்றனர். பாங்குகள் உணவுத் தான்யங்களின்மீது வழங்கும் கடன்கள் பதுக்கல் நடவடிக்கைகளுக்கு ஊக்கமளிக்காமல் இருக்கும்படிப் பார்த்துக் கொள்ளும்படியும் பாங்குகள் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கின்றன. ரிசெர்வ் பாங்கு இத்தகைய கொடுக்கல் வாங்கல்களை உன்னிப்பாகக் கவனித்து வருகிறது. மொத்த வியாபாரத்தின் மீதான கட்டுப்பாடு இப்போது கடுமையாக்கப்பட்டிருக்கிறது. மேலும் உணவு வியாபாரிகளின் ஆதரவு வர்த்தகத்தை ஒழுங்கு படுத்தவும் வர்த்தக முறைகளை மேம்படுத்தவும் உதவியாக இருக்கும்.

விலைவாசிகள் ஏறுவதாகத்தோன்றினால் அதை 24 மணி நேரத்திற்குள்ளாக குறைப்பதற்கு நடவடிக்கை எடுக்கப்படும் என்று ஸ்ரீ பட்டல் கூறியிருக்கிறார். இதற்காக இந்திய பாதுகாப்பு விதியிலும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதுவுமல்லாமல் சர்க்காரிடம் அத்தியாவசிய சாதனங்கள் ஏராளமாக கையிருப்பிலிருக்கின்றன. ஆகவே மக்களுடைய பெருந்தன்மையும், நாட்டுப்பற்றும், தடுப்பு முறைகளைப் பயன்படுத்துவதை அவசியமில்லாமல் ஆக்கிவிடும் என்று நம்பலாம். உணவு சப்ளைகள் கிடைக்கச் செய்வதற்காக சாதாரணமாக இருந்து வந்துள்ள ஏற்பாடுகள் மேலும் தொடர்ந்து இருந்து வரும். மண்டல நடமாட்டக் கட்டுப்பாடுகள் தளர்த்தப்படுகின்றன. அவை பற்றாக்குறை பகுதிகளையோ அல்லது உபரிப் பகுதிகளையோ ஏற்படுத்தி விடக்கூடாது என்பதற்காக அமுல் செய்யப்பட்டதாகும். அதாவது நாடு முழுவதும் நியாயமான முறையில் உணவு சப்ளை கிடைப்பதற்கு, செய்யப்பட்ட ஏற்பாடாகும், உணவு நிலைமை மொத்தத்தில் சீர்பட்டுவிட்டதால் இத்தடைகள் இனி வேண்டியதில்லை.

உணவு உற்பத்தியைப் பெருக்குவது, மொத்த வியாபாரத்தை ஒழுங்குபடுத்துவது ஒழுங்கான மார்க்கெட்டுகளை ஏற்படுத்துவது ஆகியவைகளுக்காக சர்க்கார் ஸ்தாபனங்கள் மூலமாகவும் தனியார் ஸ்தாபனங்கள் மூலமாகவும் மேலும் ஏராளமான அளவு உணவு கொள்முதல் செய்யவேண்டியிருக்கிறது; அதன் மூலம் கையிருப்பை இன்னும் பெருக்க முடியும். தேவைப்பட்டால் ஏற்கெனவேயுள்ள ஏற்பாட்டிற்கு அதிகமாக உணவுத் தானியங்கள் இறக்குமதி செய்யப்படும். அதே சமயத்தில் உணவை வீண் விரயம் செய்யாமலும், ஆடம்பரமான விருந்துகள் இல்லாமலும் பார்த்துக் கொள்ள வேண்டும்.

இந்தத் திட்டங்களையெல்லாம் நிறைவேற்ற நாம் எவ்வளவு தூரம் தயாராக இருக்கிறோம், எந்த அளவுக்கு ஒத்துழைக்கிறோம் என்பதைப் பொறுத்துத்தான் வெற்றி அமையும். இந்த நெருக்கடி காலத்தில் நாம் சேமிக்கும் ஒவவொரு நெல் மணியும்வெற்றிக்கு உதவும்.

ஒரு துளி உணவைக்கூட வீணாக்கக்கூடாது. பெரிய விருந்துகளைத் தவிர்க்க வேண்டும். அவைகளை நாம் சந்தோஷமாக இருக்கும்போது நடத்திக் கொள்ளலாம். நமது புராதான பழக்கவழக்கங்களால் உணவு விரயமாவதற்கு காரணமாயிருக்கிறது. அவைகளையெல்லாம் இப்போது விட்டுவிடவேண்டும். சமூக விரோத நடவடிக்கைகள் சிறிதளவு தலையெடுப்பதாகத்தெரிந்தாலும்கூட அதை குறைக்க உடனே மக்கள் கமிட்டிகள் மூலம் நடவடிக்கை எடுக்கவேண்டும். சர்க்கார் தலையீடு இல்லாமலிருப்பது நமக்கு விடப்பட்டிருக்கும் அறைகூவலாகும். நமது தார்மீக பலத்திற்கும் தேசீய கட்டுப்பாட்டுக்கும் ஏற்பட்டுள்ள சோதனையாகும். நாம் இதில் தோல்வியடையக் கூடாது.

★

## மாணவருக்கு பயிற்சி

எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் மாணவர்களுக்கு தேசீய ஒழுக்கக் கட்டுபாடு—உடற்பயிற்சி போதனை அளிப்பதற்காக, ஆறாவது பிரிவிலிருந்து 11வது வகுப்பு வரையில் ஒவ்வொரு வாரமும் ஐந்து பீரியட்கள் உடனடியாக ஒதுக்கப்பட வேண்டும் என்று, நடுத்தர, உயர்தர, உயர்தர செகண்டரிப் பள்ளிகளுக்கு உத்தரவுகள் பிறப்பிக்கும்படி யூனியன் கல்வி மந்திராலயப் எல்லா ராஜ்ய சர்க்கார்களையும் கேட்டுக்கொண்டிருக்கிறது. இந்த ஏற்பாட்டின் கீழ் மொத்தம் சுமார் ஒரு கோடி மாணவர்களுக்குப் பயிற்சியளிக்கப்படும். இத்திட்டத்துக்கு மொத்தம் ரூ 6 கோடி செலவாகும்; இச்செலவு முழுவதையும் இந்திய சர்க்கார் ஏற்றுக்கொள்வார்கள்.

★

## தாத்தா வாழ்வே!

வாழ்கவே! வாழ்கவே! வாழ்கவே!
இன்பம் பொங்கும் பாரதத்தின்
ஈடில் லாத நேரு தாத்தா
வாழ்கவே வாழ்கவே வாழ்கவே!

குழந்தை உள்ளங் கொண்டவர்
குழந்தை உள்ளங் கவர்ந்தவர்
குழந்தை போலே சிரிப்பிலே
கொள்ளை இன்பம் தருபவர்!

கல்வி நிறையக் கற்றவர்
கற்ற படியே நிற்பவர்
அல்லும் பகலும் வாழ்விலே
அயர்வு இன்றி உழைப்பவர்!

அடிமைப் பட்ட நாட்டிலே
அமைந்த விலங்கை அறுத்தவர்
கொடியோர் செய்யும் தீமைகள்
குமுறிப் போக்கி வெல்பவர்!

காந்தித் தாத்தா வாரிசாய்
கண்ட நல்ல ரத்தினம்
காந்தி வாழ வாழ்ந்திடும்
ஜவகர் வாழ்க வாழ்கவே!

வாழ்கவே! வாழ்கவே! வாழ்கவே!
இன்பம் பொங்கும் பார தத்தின்
ஈடில் லாத நேரு தாத்தா
வாழ்கவே வாழ்கவே வாழ்கவே!

—திருச்சி பாரதன்.



அமுத வாக்கு

வீரசுதந்திரம் வேண்டிநின்றார் பின்னர்
வேறொன்று கொள்வாரோ? —என்றும்
ஆரமுதுண்ணுதற்காசைகொண்டார்கள்ளில்
அறிவைச் செலுத்துவாரோ?

# பால் பண்ணைகள்

இந்தியாவில் இப்பொழுது பால் விநியோகத்தில் பலப் பிரச்னைகள் இருக்கின்றன. இப்பிரச்னைகளைப் போக்க இந்தியப் பால் பண்ணை பொறி இயல் வல்லுனர் ஒருவர் யோசனை ஒன்று கூறியுள்ளார். அமெரிக்காவில் இருக்கும் பண்ணைப் பால் நிலையங்களைப் போலவே இங்கு கிராமப் பால் நிலையங்களை நிறுவ வேண்டுமென்பதுதான் இந்த நிபுணரின் யோசனை.

ஸி. ஆர். நித்யானந்தன் என்பது இவருடைய பெயர். தமிழக அரசாங்கத்தின் துணைப் பால் பண்ணைப் பொறிஇயல் நிபுணராக இருக்கிறார். மாதவரம் பால் பண்ணையில் 1 கோடி ரூபாய் செலவில் இயந்திரங்களை அமைக்கும் பணியில் இப்பொழுது இவர் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கிறார். சென்னையின் சுற்றுப் புறத்தில் இருப்பது மாதவரம். இத்தகைய பால் நிலையங்கள் பால் பண்ணைக்காரருக்கும் கிராமத்திற்கும் மட்டுமின்றி இந்தியப் பால் பண்ணைத் தொழிலுக்குமே சுபிட்சம் கொணரக்கூடியது என்கிறார் நித்யானந்தம்.

பண்ணைப் பால் நிலையம் என்பது 300 முதல் 3000 லிட்டர் வரை பால் கொள்ளக்கூடிய தொட்டி. இதற்குள்ளேயே குளிரவைக்கும் கருவிகள் அமைக்கப்பட்டிருக்கும். 50 மணி நேரம் பால் கெடாமல் வைத்திருக்கக் கூடியது இது. பால் எடுத்துச் செல்வதற்கென்று தனிக்கருவிகள் அமைக்கப்பட்ட வண்டி இந்தப் பாலை தொலை தூரத்தில் இருக்கும் வாடிக்கைகாரர்களுக்கு கொண்டு போக முடிகிறது. இந்தப் பால் தொட்டியை நம் நாட்டிலேயே கட்டலாம் என்றும் செலவு 500 ரூபாய்கூட ஆகாது என்றும் நித்தியானந்தம் கூறுகிறார்.

38 வயதானவர் நித்தியானந்தம். பால் பண்ணைத் தொழிலிலும் அதன் பொருளாதாரத்திலும் 16 ஆண்டு அனுபவம் பெற்றவர். பெரும் மதிப்புள்ள அமெரிக்க பால் பண்ணை பொறி இயல் நிபுணர் டாக்டர் பார்ரோல் என்பாரிடம் தீவிரப் பயிற்சி பெற்றவர். கோவை மாவட்டத்தில் ஒரு வேளாண்மைக் குடும்பத்தைச் சேர்ந்தவர் நித்தியானந்தம். அரசாங்கப் பால் பண்ணையில் 12 ஆண்டு சேவை செய்த பிறகு, 1958-ம் ஆண்டில் அமெரிக்காவில் மிசிகன் மாநிலப் பல்கலைக் கழகத்தில் மேல்படிப்புக்கு அனுப்பப்பட்ட மூவர் கொண்ட முதலாவது குழுவில் சேர்ந்து கொண்டார். யு. எஸ். ஏ. ஐ. டி. என்ற சர்வதேச வளர்ச்சிக்கான யு. எஸ். நிலையம் (அப்பொழுது அதன் பெயர் டி. ஸி. எம்.) இக்குழுவை அனுப்பி வைத்தது.

பால்பண்ணைப் பொறி இயல், வெண்ணெய் தயாரித்தல், பால்பண்ணை இயந்திர நிர்வாகம், பராமரிப்பு முதலியவைகளில் சிறப்புப் பயிற்சி பெற்றார் நித்தியானந்தம். மிசிகன், விஸ்கான்ஸின், மின்னெஸ்ஸோட்டா, இல்லினொய்ஸ் முதலிய மாநிலங்களிலும், இன்னும் 19 அமெரிக்கமாநிலங்களிலும் பால்பண்ணைகள் சிறிய பால்பண்ணைகள் ஆகியவற்றின் பொருளாதாரங்களை ஆராய்ந்து அறிந்தார். அமெரிக்கப் பால் பண்ணை விஞ்ஞான மகாநாட்டிலும் கலந்து கொண்டார். சுலபமாகப் பயன்படுத்தக் கூடிய நவீன முறைகளை இந்தியா ஏற்கும்பட்சத்தில், பால் சேகரிப்பு, பக்குவப் படுத்துவது முதலிய பணிகளில் இந்தியா அமெரிக்காவுக்கு இணையாக சுலபத்தில் வரமுடியும் என்று கூறுகிறார் நித்தியானந்தம்.

இந்தியாவின் பால் பண்ணைத் தொழில் முழுவதிலும் இயந்திரங்களை உடனே புகுத்தி விடுவது அவசரப்பட்டுச் செய்யும் ஒரு காரியமாகும் என்கிறார் அவர். கருவிகள் மூலம் பால் கறப்பது, மாட்டின் பால் தரும் அளவு மிகக் குறைவாக இருந்துவரும் வரை, நினைக்கவே முடியாத காரியமாகும். நவீன பால்பண்ணைகளில் சுமார் 7 பேர் ஏறத்தாழ 40,000 ராத்தல் பால் கையாளுகின்றனர். இந்தியாவில் இது இப்பொழுது சாத்தியமேயல்ல. மேலை நாடுகளில் கண்ணாடி புட்டிகளுக்குப் பதிலாக, உள்ளே பிளாஸ்டிக் பையுள்ள அட்டைப் பெட்டிகள் பால் கொண்டு போகப் பயன் படுத்தப்படுகின்றன. இந்தியாவில் மக்கள் இப்பெட்டிகளை ஏற்கமாட்டார்கள். தற்சமயம் தினசரி இரண்டு தடவை பால் வழங்கப்படுகிறது. இந்தப் முறையைக் கை விடுவதானால் அதற்கு பலத்த எதிர்ப்பு இருக்கும். இன்னும் பல ஆண்டுகளுக்கு பால் பணணைத் தொழிலில் உபப் பொருள்கள் மிகக் குறைவாகவே இருக்கும்.

ஆனால் பால் சேகரிப்பது, பக்குவம் செய்வது ஆகிய பணிகளுக்கு நவீன முறைகளைக் கைகொள்வது சாத்தியம் என்பது மட்டுமல்ல, தொழிலின் வளர்ச்சிக்கு அவசியமானதும்கூட என்று கூறுகிறார் நித்தியானந்தன். பால் கறப்பதற்கும் கறந்த பாலை உபயோகிப்பதற்கும் இடையேயுள்ள நேரம் மிக்க் குறைவு. ஆகையால் தற்கால பால் சேகரிப்பு, விநியோக முறை, விரைவில் கெட்டு விடும் இந்தப் பொருளின் விற்பனை வாய்ப்பையும் மிகவும் சுருக்கி விடுகிறது என்கிறார் நித்தியானந்தன். தற்கால அமைப்பு எப்படி இருக்கிறது என்றால் பிராந்தியங்களில் பாஸ்ச்சர் முறைப்படி சுத்தம் செய்யும் பெரிய இயந்திரங்களும் அடுத்தபடி உபப் பிராந்தியங்களில் குளிர வைக்கும் இயந்திரங்களும் தொலைவான இடங்களில் சேகரிப்பு நிலையங்களும் இருக்கின்றன. இதனால் பால் சேகரிப்பது, உபரி பாலை அனுப்புவது ஆகிய பணி குறைவாகத்தான் நடக்கிறது. தற்சமயம் இந்த முறையில் நகரங்களிலும் ஓரளவு நகரம் மாதிரியாக வளர்ச்சி பெற்ற இடங்களிலும் உபரியாக இருக்கும் பால் விநியோகம் செய்ய வசதி இருக்கிறது. ஆனால் பெரிய கிராமங்கள் இதை முழு அளவில் நன்றாகப் பயன் படுத்திக் கொள்ளும் வழியில்லை.

ஒவ்வொரு கிராமத்திலும் பண்ணைப் பால் நிலையம் ஒன்றை அமைப்பதன் மூலம் கிராமத் தேவைகளை இளைத்தும், நகரத் தேவையுடன் கிராம சப்ளைகளை இணைத்தும் இரு இலட்சியங்களையும் அடைய முடியும் என்கிறார் நித்தியானந்தன். “10,000 ரூபாய் முதலீடு செய்வதால் ஒரு கிராமத்திற்கு அளவிட முடியாத அனுகூலங்கள் ஏற்படும்” என்கிறார் அவர். இதனால் கிராமத்திற்கே 24 மணி நேரம் பால் சப்ளை உறுதியாகிறது. அத்துடன் பால் பண்ணைக்காரருக்கு விலையும் விற்பனை வாய்ப்பும் உறுதியாகின்றன. தன் விருப்பமான நேரத்திற்கு பாலை நிலையத்தில் கொண்டு கொடுக்கலாம். இயற்கையின் சீற்றத்தால் ஏற்படும் போக்குவரத்து சீர்குலைவினால் அவருடைய வருவாய் பாதிக்காது.

சிறிய கிராமங்கள் ஒன்று சேர்ந்து ஒரு நிலையத்தை ஏற்படுத்தலாம் என்கிறார் நித்தியானந்தன். இதனால் குளிரச் செய்யும் நிலையங்களைக் குறைக்கலாம். பாஸ்ச்சர் முறைப்படி சுத்தம் செய்யும் இயந்திரங்களுக்கு ஆகும் செலவு குளிர வைக்கும் இயந்திரங்களுக்கும் ஆகின்றன. நகரப்பால் திட்டங்கள் தான் பாஸ்ச்சர் முறைப்படி சுத்தம் செய்யும் இயந்திரங்களை வைத்திருக்கின்றன. சென்னையில் கூட்டுறவுப் பால் சங்கங்கள் அதிகரித்து வருவது இதற்கு அனுகூலமாகும்.

பால் நிலையப் பராமரிப்புப் பணிக்கோ அல்லது சாலையில் பால் எடுத்துச் செல்லும் குளிர் சாதனங்கள் அடங்கிய பால் வண்டியை பராமரிப்பதற்கோ, தீவிரத் தொழில் நுட்பப் பயிற்சி தேவை இல்லை என்கிறார் நித்தியானந்தன். பால்பண்ணைக்காரரே அமெரிக்காவில் செய்யப் படுவதைப் போல் தொட்டிகளைக் கழுவி சுத்தம் செய்யலாம். வண்டியோட்டியும் பாலைச் சோதனை செய்யலாம் அளந்து கொட்டலாம். சென்னையில் சாலைகள் மிக நன்றாக இருக்கின்றன; கிராம புறங்களில் மின்விசை வசதி அளிப்பதில் தமிழகம் முன்னணியில் இருக்கிறது. இதனால் பால் நிலையம் இந்த மாநிலத்திற்கு மிகவும் பொருத்தமாக இருக்கும் என்கிறார் நித்தியானந்தன்.

ஓரளவு நகரங்கள் மாதிரி வளர்ச்சி பெற்ற இடங்களில் கூட, இத்தகைய நிலையங்கள் சிறிய பால் பண்ணைகளுக்கு முன்னோடியாக அமையக்கூடும். பாலோடு ஐஸ்கிரீம், பால் இனிப்புச் சத்து முதலியவைகளைத் தயாரிக்கும் தொழிற்சாலைகளை பிறகு அமைக்கலாம்.

“ஒரு முக்கிய பிரச்னைக்குச் சரியாகத் தோன்றும் பரிகாரம் ஒன்று இதோ இருக்கிறது. இந்தியாவில் பால் தொழில் புரியும் மாட்டுச் சொந்தக்காரர், அமெரிக்கப் பால்காரரைவிட ஒரு குறிப்பிட்ட அளவுப்பாலுக்கு அரைப் பங்கு அதிக விலை பெறுகிறார். அப்படி இருந்தும் ஏராளமான கறவை மாடுகளை வைத்திருப்பது கட்டுப்படியாகாது என்பது அவரது அனுபவம். பால் நிலையம விற்பனை வாய்ப்பை அவருடைய இருப்பிடத்திற்கே கொண்டு வருவது, அவரைக் காக்க முற்படுகிறது” என்கிறார் நித்தியானந்தன்.

★







## கடல் நீரிலிருந்து குடிதண்ணீர்

கலிபோர்னியா கடலிலிருந்து நாள் தோறும் 38 லட்சம் லிட்டர் உப்பு நீரைக் குடி நீராக்கும் யந்திரசாலை மேலே காணப்படுவது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உள்நாட்டு உபயோகத்திற்கென்று கடல் நீரைத் தண்ணீராக்கும் இதுபோன்ற ஐந்து பெரிய நிலயங்களை அமைத்திருக்கிறார்கள்.

# கார்த்திகை மாத வேளாண்மை

**வீரர்கள் நம் எல்லையைக் காக்க முனைந்து நிற்கும் இச் சமயத்தில் விவசாயிகளின் பொறுப்பு மிக அதிகமாகும். தேசத்தின் உற்பத்தியைப் பெருக்குவதில் வேறெந்தக் காலத்திலும் காட்டாத அளவு பெருங் கவனம் காட்டி அவர்கள் நாட்டுக்கு உதவவேண்டும்.**

உழுவார் உலகத்தார்க்கு அச்சாணி என்று கூறுகிறது தமிழ் வேதம். உலகில் எல்லாம் சரிவர இயங்குவதற்கான முக்கிய கடமையை ஆற்றி வருபவர்கள் உழவர்கள். பிற தொழில் செய்பவர்கள் எல்லோருமே அவர்கள் கையை எதிர் நோக்கி வாழ்பவர்களே ஆவார்கள். இந்த உண்மையை நம் முன்னோர்கள் நன்கு அறிந்திருந்தார்கள். ஆனால் கால மாற்றத்தில் ஏற்பட்ட தொழில் பெருக்க ஆதிக்கத்தில் விவசாயமும் பிற தொழில்களோடொன்றே என்பது போலக் கருதப்படும் நிலைமை வந்துவிட்டது. வேறெந்தத் தொழிலையும் விட சமுதாயத்திற்கும் நாட்டிற்கும் மூல ஆதாரமாக உள்ளது விவசாயமே என்பதையும் அதைச் செய்து வாழ்பவர்கள் உலகை வாழ்விப்பவர்கள் என்பதையும் உணர வைப்பது போல இப்போது யுத்த நிலைமை நமக்கு ஏற்பட்டிருக்கிறது. சாதாரண காலத்தில் மறக்கப்பட்டிருந்த பல உண்மைகள் இப்படிப்பட்ட நெருக்கடி காலங்களில் மக்களுக்குப் புரிந்துவிடும். இன்றுள்ள நிலைமையில் பிற தொழில்களைவிட விவசாயத் தொழில் மீது பெருங் கவனம் செலுத்தப்பட வேண்டும். யுத்த தளவாட உற்பத்தியில் விரைவுப் பெருக்கம் ஏற்படுத்துவது போல உணவுப் பொருள் உற்பத்தியிலும் பன்மடங்கு பெருக்கம் உண்டாக்கப்பட வேண்டும். எல்லோருக்கும் விலைவாசி ஏற்றமின்றித் தாராளமாக உணவுப் பொருள் கிடைத்துக் கொண்டிருக்கச் செய்யும் ஆற்றல் இன்று உழவர்கள் கையிலிருககிறது. நாட்டின் நெருக்கடி நிலையை உணர்ந்து அவர்களாகவே தீவிர உற்பத்தித் திட்டங்களில் முனைய வேண்டும்.

நடப்பில் உள்ள பயிரில் கவனக் குறைவு எந்த வகையிலும் ஏற்படாதபடியும் லாப நோக்கத்தில் பணப்பயிர்களில் அதிகம் நாட்டம் செலுத்தாமலும் அத்யாவஸ்ய உணவுப் பொருள் உற்பத்தியில் அதிகக் கருத்துச் செலுத்த வேண்டும். வயலில் உள்ள பயிருக்கு எத்தீங்கும் வராதபடி காக்கும் நடவடிக்கைகளில் இபபோது அதிக விழிப்பு வேண்டும். அறுவடை, சேமிப்பு இவற்றில் சேதம் ஏற்படாதபடி சிக்கனத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். நிலத்தைத் தரிசாகப் போடுவது பாபம் என்ற கொள்கையை மனதில் ஆழமாகப் பதித்துக் கொள்ள வேண்டும். சுருங்கச் சொன்னால் போரில் முன்னணிப் படை ஒவ்வொரு விஷயத்திலும் எப்படி எச்சரிக்கையுடனும், விழிப்புடனும் இருக்கும்மா அப்படி விவசாய நடவடிக்கைகளிலும் எச்சரிக்கையுடனும், ஒழுங்காக அமைந்த திட்டங்களுடனும் செயலாற்ற வேண்டும்.

### பயிர்களுக்குச் சிக்கனமாக நீர் விடல்

கார்த்திகை மாதம் அடைமழைக் காலம். பல தான்யங்கள் அடுத்து வரும் காலத்தில் அறுவடைக்குத் தயாராகும். அறுவடையை நெருங்கிக் கொண்டிருக்கின்ற பயிர்களுக்கு அதிகமான நீர் தேவையில்லை. பொதுவாக நிலங்களுக்கு ஏற்றங்கள் மூலம் நீர் இரைக்கும் விவசாயிகள் நீரை வீணாக்காமல் சிக்கனமாக உபயோகிப்பதன் அவசியத்தை உணர்ந்து நடப்பார்கள். ஆனால் நதி, ஏரி, குளம் ஆகியவற்றின் நீரைப் பாசனத்திற்கு உபயோகிப்பவர்களோவென்னில் பல இடங்களில் தேவைக்கும் அதிகமாக நீரை வயலில் செலுத்தி வீணாக்குகிறார்கள். நீரை வீணாக்காமல் சிக்கனம் செய்வது எல்லாக் காலத்திலும் கடைப்பிடிக்க வேண்டிய பொது விதி என்றாலும் இப்போதுள்ள நிலையில் அது இன்னும் அதிமுக்கியத்வத் தேவையாகிறது. பயிர்களுக்குத் தேவைப்படும் தண்ணீரின் அளவையும் அதனை எப்படிச் சிக்கனமாகப் பயன் படுத்துவது என்பதையும் பற்றி விவசாயிகள் தெரிந்து கொள்வது நல்லது.

ஒவ்வொரு பயிரும் நன்கு வளர்ந்து முதிர்ச்சியடைவதற்கு ஒரு குறிப்பிட்ட அளவு தண்ணீர் தேவைப்படுகிறது. உதாரணமாக நெல், கரும்பு, சோளம் இறவைப் பருத்தி ஆகியவற்றுக்கு முறையே 70, 75, 20, 30 ஏக்கர் அங்குல நீர் தேவைப்படுமென்று கணக்கிட்டிருக்கிறார்கள். (ஒரு ஏக்கர் நிலத்தில் ஒரு அங்குல உயரம் நிற்கும் தண்ணீர், ஒரு ஏக்கர் அங்குல நீர் என்று கூறப்படும்) இப்படி இவ்வப்பயிருக்குத் தேவைப்படும் நீரானது அவற்றின் வேர் மண்டலத்தில் கிடைக்கும்படி நாம் செய்ய வேண்டும். நீர் வாய்க்கால் மிக அகலமாயிருந்தாலும் மணற்பாங்காக இருந்தாலும் ஒரு பகுதி நீர் ஆரம்பத்திலேயே பூமிக்குள்ளிறங்கி வீணாகி விடும். ஆகவே வாய்க்கால்களில் தண்ணீர் அதிகம் வீணாகாதபடி இயலும் இடங்களிலெல்லாம் அதனைக் கெட்டிப்படுத்தவோ, கட்டுக் கட்டிப் பூசி விடவோ வேண்டும். எக்காரணங் கொண்டும் பயிரின் தேவைக்கு அதிகமான நீரை வயலில் கட்டக் கூடாது. அதிகமாக நிற்கும் நீர் பூமிக்குள் இறங்கி ஒன்றுக்கும் உதவாது போகும். மேலும் அந்த நீர் அடியிலிறங்கும் போது பயிர்ச் சத்துக்களையும் கரைத்துக் கொண்டு போய்விடக்கூடும். இதனால் நிலம் நாளடைவில் சாகுபடிக்குத் தகுதியற்றதாகவும் ஆகி விடலாம்.

வயலுக்கு நீரைத் திறந்து விட்டு அது நிரம்பி வழியும் வரை சிலர் கவனம் செலுத்தாது விடுவதுண்டு. இரவு முழுவதும் தண்ணீர் பாய விடும் இடங்களில் அனேகமாகத் தேவைக்கு அதிக நீர் வயலில் விடப்படுகிறது. வரப்புக்கள் சரியாக இல்லாத இடங்களிலும் நீர் வீணடிக்கப்படும். இவ்வித சேதங்கள் தவிர்க்கப் பெறல் வேண்டும்.

### நெல் தத்துப் பூச்சி-ஜாக்கிரதை

சாதாரணமாக அடைமழைக் காலத்தில் நெற்பயிரை வெள்ளை, பச்சை ஆகிய இருவகைத் தத்துப் பூச்சிகள் தாக்குகின்றன. இவை நெல்தாளின் சாற்றை உறிஞ்சிவிடுவதால் அவை மஞ்சள் நிறமடைந்து பயிர் வளர்ச்சி குன்றும். தாக்குதல் தீவிரமானால் பயிரே பட்டுப் போய் மகசூல் குறைந்து போகும். இப்பூச்சிகளால் நெல் பயிருக்கு வரும் ஆபத்தைத் தவிர்ப்பதில் விவசாயிகள் மிக விழிப்பாயிருக்க வேண்டும். வளர்ச்சியடையாத பூச்சிகளைக் கொல்ல 5 சதவிகித டி. டி. டி. மருந்தை ஏக்கருக்கு 15.20 ராத்தல் வீதம் தூவலாம். டி. டி. டி. 50 சதவிகித தூள் ஒரு ராத்தலை 50 காலன் நீரில் கலந்து தெளிப்பதன் மூலம் வளர்ச்சியடைந்த பூச்சிகளையும் கட்டுப்படுத்தலாம். வெள்ளைத் தத்துப் பூச்சி, பச்சை தத்துப் பூச்சியைக் காட்டிலும் உருவில் சற்றுப் பெரியது. அதன் உடல் முழுவதும் ஒரே வெள்ளை நிறமாய் இருக்கும். இந்தப் பூச்சியைக் கட்டுப்படுத்த 10 சதவிகிதமுள்ள பி. எச். சி தூள் சிறந்ததாகும். ஏக்கருக்கு 15–20 ராத்தல் தூவலாம். நீரில் கலக்கக்கூடிய பி. எச். சி 50 சதவிகித தூளை ஒரு ராத்தலுக்கு 13 காலன் தண்ணீர் வீதம் கலந்தும் தூவலாம்.

### காலத்தில் அறுவடை

முதல்போக சம்பா நெல், கம்பு, ராகி, மானாவாரிச் சோளம், உளுந்து, பாசிப் பயிர் மற்றும் பல புஞ்சைப் பயிர்களின் அறுவடை இந்த மாதம் முதல் தொடங்கி விடும். காலமும் பக்குவமும் பார்த்து அறுவடையை உடனடியாகத் தொடங்குவதில் விவசாயிகள் விழிப்பாயிருக்க வேண்டும். அசட்டையாக விட்டு வைத்தால் தான்யமணிகள் உதிர்ந்து போகும். பறவைகள், எலி முதலானவற்றாலும் சேதம் ஏற்படும். அறுவடையான தான்யங்களைத்தாளடித்தல், சேமிக்கும் இடத்திற்கு எடுத்துச் செல்லுதல் ஆகிய நடவடிக்கைகளின் போதும் அதிகச் சேதம் ஏற்படாதபடி பார்த்துக் கொள்ள வேண்டும்.

### வேலியிடுதல்

ஆடு மாடுகளாலும், மனிதர்களாலும்வயல்களிலுள்ள பயிர்களுக்குச் சேதம் உண்டாவதைத் தடுக்க வயலைச் சுற்றி வேலியிடுவது அவசியமாகும். கம்பி வேலியிடுவதானால் செலவு அதிகமாகும். எனவே பண்டு தொட்டு நம் விவசாயிகள் செடிகளை நட்டு வேலியிடும் பழக்கத்தை மேற்கொண்டு வருகிறார்கள். இதனால் சாகுபடி செய்யப்படும் பரப்புக் கொஞ்சம் குறையும். வேலிச் செடிகளின் வேர்கள் நிலத்துக்குள் பாய்ந்து அங்குள்ள உரத்தைக் கிரகிக்கவும் கூடும். ஆனால் அதிக இடத்தை அடைக்காமலும், ஆழமாக வேரைப் பதிக்காமலுமுள்ள செடிகளை வேலிகளாக நட்டால் அதிகக் கேடில்லை. அறுவடை முடிந்ததும் வேலிச் செடிகளையே வயலுக்குள் வெட்டி வீழ்த்தி உரமாக்கிக் கொள்ளலாம். இப்படிப்பட்ட வேலிச் செடிகளில் கிளிரிசீடியா மிகச் சிறந்ததென்று சமீப காலங்களில் கண்டறியப்பட்டிருக்கிறது. இதை வயல்களைச் சுற்றி நெருக்கமாக நட்டு அடிக்கடி பக்கவாட்டில் வளரும் கிளைகளை வெட்டி விட்டால் உயர வாட்டில் வளர்ந்து நல்ல வேலிப் பாதுகாப்பாக விளங்கும். கிளிரிசீடியா நடுவதற்கு இதுவே ஏற்ற காலமாகும்.

### பூச்சி மருந்துகள் கவனமிருக்கட்டும்

பூச்சி மருந்துகள் சேமிப்பிலும் உபயோகத்திலும் கவனக் குறைவு காரணமாக ஏற்படும் விபத்துக்களைப் பற்றிய செய்திகள் அதிகம் வருகின்றன. ஆகவே கீழ்க்கண்ட வழிமுறை சிலவற்றை விவசாயிகள் கையாள்வது விரும்பப்படுகிறது.

* மருந்துகளைக் குழந்தைகளும், ஆடுமாடுகளும் பழகும் இடத்தில் வைக்க வேண்டாம்.
* மருந்து தெளிக்கும்போது உடம்பின் எந்தப் பகுதியிலும் படும்படி அசட்டையாக இருக்க வேண்டாம்.
* பூச்சி மருந்துப் புட்டிகளில் உள்ள லேபில்களைக் கிழிக்க வேண்டாம்.
* மருந்து தெளிக்கும் வேலை முடியும் வரை இடையில் வெற்றிலை போடவோ, புகை பிடிக்கவோ, உணவுண்ணவோ வேண்டாம்.
* மருந்து விஷத்தன்மையுடைய தென்பதை வீட்டிலுள்ளவர்கள் எல்லோருக்கும் சொல்லி எச்சரித்து வைக்க வேண்டும்.
* காற்றின் திசையை ஒட்டி மருந்தடிக்க வேண்டும்.
* மருந்துத் தூள் ஆவி கண், மூக்கு முதலியவற்றில் செல்லாமல் கவனித்துக் கொள்ள வேண்டும்.
* மருந்தடித்து முடிந்ததும் கை, கால், முகங்களைச் சுத்தமாகச் சோப்புப் போட்டுக் கழுவிய பின்பே வேறு எந்த வேலைகளிலும் ஈடுபடவேண்டும்.

# சீனுவின் பொருளாதாரத் தோல்வியை மறைக்க நம்மீது ஆக்கிரமிப்பு

பாரதம் அடாத செயல் புரித்திருக்கிறது; ஆக்கிரமிப்பு செய்திருக்கிறது, என்றெல்லாம் பீகிங் ரேடியோ கூக்குரலிடுகிறது. எல்லைப் புறச் சீனத் துருப்புகள் தாக்குதல் மேற்கொண்ட போதெல்லாம் "அய்யோ புலிவந்துவிட்டதே" என்று ஓலமிட்டு வந்திருக்கின்ருர்கள். இப்படித் திரும்பத் திரும்பப் பொய் சொல்லுவதால் சீனமக்களே இந்தப் பிரசாரத்தை நம்பிவிடுவார்கள் என்று அவர்கள் நினைக்கிருர்களா? அல்லது உலகத்தையே ஏமாற்றி விடலாம் என்று மனப்பால் குடிக்கிருர்களா? மற்றவர்களை ஏமாற்றும் இந்த சாகஸம் பைத்தியக்காரத்தனம் தானு அல்லது அந்தப் பைத்தியத்திலும் ஓர் தந்திரம் இருக்கிறதா?

மாஸேதுங், "நூற்றுக்கணக்கான மலர்களை மலரவிடுங்கள்," நூற்றுக்கணக்கான சிந்தனையும் பெருக்கட்டும்" என்பது தமது கொள்கையென்பதாக உலகை நம்பச் செய்த காலமொன்றுமுண்டு, வெளிநாட்டினரெல்லாம் இதை வெகுவாக வரவேற்றனர். ஆனுல் அக் கொள்கையை வெளியிட்ட ஓராண்டுக்குள்ளாக ராணுவ அதிகாரத்துக்குட்பட்ட கம்யூன்கள் ஏற்படுத்தப்பட்டன. அதைக் கண்டு கம்யூனிஸ்டுகளும், அவர்களுடைய தோழர்களுமே திடுக்கிட்டுவிட்டனர்.

இனிய சொற்களும் ருசிகரமான கதைகளும மக்களில் ஒரு பகுதியை ஏமாற்றலாம். சமாதான சகவாழ்வு என்ற சொற்ருெடர்கள் சீனர்களின் போர் நடவடிக்கைக்கான முன்னுரையாகவே இருந்தது. ஆனுல் பாரத மக்களாகிய நமக்கு அந்த சொற்கள் தந்த பொருள் அண்டை நாடுகளுக்கிடையே நிரந்தரமான நட்புறவு, என்பதை அவர்கள் நன்கு அறிந்திருந்தர்ர்கள்.

பஞ்சசீலத்தை ஏற்றுக்கொண்டதின் மூலம் அவர்கள் நம்முடைய கலாசார உணர்வையும் தத்துவத்தையும் தவருகப் பயன்படுத்திக்கொண்டார்கள்.

நாம் பத்திரமாக இருக்கிறோம் என்ற தவருன நம்பிக்கையையுமம் நம்மிடையே ஏற்படுத்தினுர்கள்.

மோசப்பாதையில் சென்று அழிவுக்கு வழி தேடினுர்கள். கண்ணியமான முறைகளை அறவே அலட்சியமம செய்து சீனர்கள் இந்தத் தந்திரங்களைக் கையாளுகிருர்கள். இந்தச் சந்தர்ப்பத்துல் மாஸேதுங்கின் சொற்கள் விபரீத அர்த்தத்தைக் கொடுக்கின்றன. மேற்கில் தாககிக் கொண்டே கிழக்கில் சத்தம் போட்டு எதிரியைக் குழப்பலாமென்பதாக மாஸேதுங் கூறியிருக்கிருர்.

இவ்வகையிலான பெரிய மோசக்காரச் செயல்களுடன் பொருளாதாரப் புள்ளி விவரங்களைத் திட்டமிட்டுத் திரித்துக் கூறுவதுச் சீனர்களின் போர் தந்திரத்தின் ஒரு முக்கிய அம்சமாகும். பெருமளவில் பிரசாரம் செய்யப்பட்ட "முன்னேறிப் பாய்ந்து செல்லும்" கொள்கையினுல், வெற்றி சாதனையைப் பற்றி உண்மைக்கு முற்றிலும் புறம்பான தோற்றம் ஒன்றை அவர்கள் சிருஷ்டித்தார்கள். ஆசியாவிலும் ஆப்பிரிக்காவிலும் வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில், விரைவான தொழிலியல் அபிவிருத்திப் பற்றிய மந்திரஜாலத்தைக் கொண்டுப் பிரமிக்கச்செய்துவிடவேண்டும் என்று முயற்சித்தார்கள்.

முன்னேறிப் பாய்ந்து செல்லும் திட்டத்தின் முதலாண்டில் வியப்பூட்டும் உற்பத்திப் பட்டியல் ஒன்றை பீகிங் உலகிற் கொடுத்து பறை சாற்றியது. இந்தப் புள்ளி விவரங்கள் மிகைப் படுத்தப்பட்டவை மட்டுமல்ல, கற்பனையில் பிறந்தவை என்பதும் பிறகு விளங்கிவிட்டது. இருபதாண்டு வளர்ச்சியை இருபது நாட்களில் சாதித்துவிடுவோம் என்று பறை சாற்றியதற்கு ஆதாரமாகவே இந்த விவரங்கள் காட்டப்பட்டன.

சென்ற கோடைப் பருவத்தில் இந்த "சாதனைகள்" மிகவும் குறைந்துவிட்டன. வெளியே சொல்ல முடியாத அளவிற்கு அவைகள் வீழ்ந்துவிட்டன. ஆஸ்திரேலியாவுக்கும் கானடாவுக்கும் சீன வர்த்தக தூது கோஷ்டிகள் காவடியெடுத்தன. பட்டினியால் வருந்தும் சீனமக்களுக்கு உணவு கொடுப்பதற்காக அவர்கள் 170 கோடி ரூபாய் மதிப்புக்குத் தானியங்களை வாங்கினுர்கள்.

சீனுவிலிருந்து அகதிகள் வெளியேறி ஹாங்காங்குக்கும் மக்கோவுக்கும் சென்ருர்கள். ஒரு தொழில் நகரத்தில் ஒரு மாதத்திற்கான பங்கீடு தானியங்கள் மூன்று நாட்களில் தீர்ந்துவிட்டது.

என்று ஒரு பத்திரிகை நிருபர் எழுதியிருந்தார். வருடத்திற்கு நான்கு முறை தான் சர்க்கரை வழங்கப்பட்டது. புல்லைக் காய்ச்சி "சூப்"பாகக் குடித்தார்கள் சீன மக்களிடையே உற்சாகம் குறைநது விட்டது.

"பாய்ந்து செல்லும் முயற்சி" படுகுழியில் கொண்டுபோய் விட்டுவிட்டது.

இதற்கு பீகிங் அரசாங்கம் ஒரு வழி கண்டுபிடித்தது. முன்னர் விவசாயிகளைத் தொழிற்சாலைகளுக்கு அனுப்பிற்று. இப்பொழுது தொழிலாளர்களை வயல்களுக்கு அனுப்பிற்று. ஆனுல் வடக்கில் மஞ்சூரியாவிலிருந்து தெற்கில் யூனுன் வரையிலும், மத்திய ஆசியாவிலிருந்து ஷாங்காய் வரையிலும் சீன மக்களிடையே நிலவிய ரகசிய சம்பாஷணை உணவைப் பற்றியதுதான். பீகிங் அரசாங்கத்தின் நிலைமை பரிதாபம்தான்!

ஆகவே வேறு வழியில்லாமல் நம்பிக்கையிழந்து பசியால் வாடும் சீன மக்களின் கவனத்தை மாற்றுவதற்காகவே சீனு நமது வடக்கு எல்லையில் ஆக்கிரமிப்பு மேற்கொண்டிருக்கிறது என்று கொள்ளலாம்.

இந்த மோசடிக்குப் பாரதத்தைப் பொறுப்பாளியாக்குவதற்காக பீகிங்ரேடியோ பொய் நிறைந்த பிரசாரத்தைத் துவக்கியிருக்கிறது. இருந்தாலும்அவர்கள்சொல்லும் கதை அர்த்தமற்றது. பைத்தியக்காரன் சொல்லும் பொருளற்ற கதையாகவே தொனிக்கின்றது.

★

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

அன்று மாலையில் கவிஞர்கள், எழுத்தாளர்கள், கலைஞர்கள், மாணவர்கள், மாதர்கள், தொழிலாளர்கள் முதலிய பல்வகைத் திறத்தாரும் கொண்ட மாபெரும் ஊர்வலம் ஒன்று ராஜாஜி ஹாலிலிருந்து புறப்பட்டு, பாரதியின் கவிபாடி பாரதம் காக்கும் முழக்கத்தோடு திலகர் கட்டம் வந்து சேரும். அங்கே பாரதியின் வீராவேச விடுதலைப் போர் முரசு இன்றைய ஆக்கிரமிப்புக்கு எதிராக வழங்கப் பெறும். தமிழ் நாட்டின் தலைசிறந்த எழுத்தாளர்களும், சிந்தனையாளர்களும் கூட்டநிகழ்ச்சிகளில் கலந்து கொள்வார்கள்.

10, 11 தேதி முற்பகல் வேளைகளில் பிற மாநிலங்களைச் சேர்ந்தவர்களது இலக்கியக் கருத்தரங்கும், பிற்பகல் வேளைகளில் பாரதியை மொழி பெயர்த்த பிற மாநிலக் கவிஞர்களும், தமிழ் நாட்டுக் கவிஞர்களும் கலந்துகொள்ளும் கவி அரங்கும் நடைபெறும். அதையடுத்து மாலை வேளைகளில் மகாகவி பாரதியைப் பற்றி தமிழ் இலக்கியக் கருத்தரங்கு தமிழ் அறிஞர்களைக் கொண்டு நடத்தப் படும். கவி அரங்கத்திற்கு திரு. நாமக்கல் வெ. ராமலிங்கம் பிள்ளை அவர்களும், கருத்தரங்கிற்கு திரு தெ. பொ. மீனுட்சிசுந்தரம் அவர்களும் தலைமை வகிக்க அழைக்கப் பட்டிருக்கின்ருர்கள். விழாவின் முடிவில் மாணவர்கள், மாதர்கள், தொழிலாளர்கள், எழுத்தாளர்கள் அணிவகுத்து நின்று முதலமைச்சர் அவர்கள் தலைமையில் தேசப் பாதுகாப்புக்கான பிரதிக்ஞை எடுத்துக் கொள்வார்கள்.

நிகழ்ச்சியின் மற்ருெரு முக்கிய அம்சமான பாரதி கண்காட்சி 8ம் தேதி மாலையே துவக்கி வைக்கப்பெற்று ஒரு வாரம் திறந்து வைக்கப் பட்டிருக்கும். இந்தக் கண்காட்சியில் பாரதியாரின் படங்கள், கையெழுத்துப் பிரதிகள், நூல்கள், பாரதியைப் பற்றிய குறிப்புக்கள், பாரதியாரால் நடத்தப் பெற்ற பத்திரிகை முதலியவை இடம் பெறும். கல்கத்தா தேசிய நூல்நிலையம் தன்னிடமுள்ள பாரதியாரைப் பற்றிய நூல்களையும், பத்திரிகைகளையும் இதற்கென்றே பிரத்தியேகமாக அனுப்பி வைககும். தமிழ் நாட்டின் ஓவியர்கள் தீட்டிய சிறந்த சித்திரங்கள், பாரதியாரின் கருத்துமிக்க வாக்கியங்கள், அவருடைய கவிதைகளுக்காக எழுதப்பட்ட சித்திரங்கள், சிற்பங்கள், முதலியவை இதற்காகச் சேகரிக்கப்பட்டிருக்கின்றன. இதைத் தமிழ் நாட்டு முதலமைச்சர் திரு. காமராஜ் அவர்கள் திறந்து வைக்கிருர்.

இந்தியா வெங்குமுள்ள பிற மொழிப் பத்திரிகைகளில் பாரதியாரைப் பற்றிய கட்டுரைகள், படங்கள், முதலியன வெளியிட்டு அவருடைய செய்தியைப் பரப்ப ஏற்பாடு செய்யப் பட்டு வருகிறது.

தமிழ் நாட்டுப் புத்திரிகைகளையும் பாரதி விழாவுக்கென்றே சிறப்பு மலர்கள் வெளியிடும்படி கேட்டுக் கொள்வதென்றும், விழாக் குழு முடிவு செய்துள்ளது. அதற்கான படங்களையும், தகவல்களையும், விழாக்குழு அனுப்பி வைக்கும். தமிழ்ப் பெருமக்களின் மேலான ஒத்துழைப்போடு பாரதி விழா, ஆக்கிரமிப்பை முறியடிக்கும் விழாவாக, நடைபெறும் என்று விழாக் குழு நம்புகிறது.

★





Edited & Published by its owner Sri Triloka Sitaram and Printed by him at his Shivaji Newsprinters, 24, A-Theradi Bazaar, Tiruchy-2.
Single copy six nP ANNUAL SUBSCRIPTION INCLUDING 4 SPECIAL NUMBERS: For INDIVIDUALS Rs. 5. For INSTITUTIONS Rs. 10